உ

சிவமயம்.

# திருக்களந்தைத் தலபுராண வசனச் சுருக்கம்.

---

இஃது

அம்பாசமுத்திரம் தீர்த்தபதிஹைஸ்கூல்,

தமிழ் பண்டிதர்,

R. அரிகரமய்யர் அவர்களால்,

மொழிபெயர்க்கப்பெற்று

களக்காடு, மகா-ா-ா-ஸ்ரீ

சி. மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை அவர்களால்,

அம்பாசமுத்திரம்

ஸ்ரீ ராமகிருஷ்ண பிரஸில்,

பதிப்பிக்கப்பெற்றது.

---

1933.

# முகவுரை.

சிவபுராணங்களில் ஒன்றாகிய பிரமாண்ட புராணத்தில் விரிந்து கிடக்கும் இந்தக் களந்தை (களக்காடு) நகரத்துக்குரிய புராணத்தை ஷெடியூர் மேலைத்தெரு ஞானப்பிரகாச பண்டாரம் ஆதீனம் புலியூர் மடாதிபதியாகிய ஸ்ரீ கைலாசதேசிகர் அவர்கள் விருத்தப்பாவினால் பாடியருளினார். இதனை பள்ளிச் சிறாரும் பெண்பிள்ளைகளுங்கூடப் படித்துப்பொருள் அறிந்துகொள்ளும் வண்ணம் பெருக்கமும் சுருக்கமும் இல்லாதபடி வெகு லெகுவான தமிழ் நடையில் எழுதித் தரல் வேண்டுமென்று ஷெடியூர் சைவ வேளாளர்குலதிலகராகிய சிதம்பரநாதபிள்ளையவர்கள்குமாரரும் போலீஸ் மேலதிகாரியுமான திருவாளர் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை அவர்கள் கேட்டுக்கொண்டதற்கு இசைந்து இப்புத்தகத்தை வரைதலாயினன்.

R. அரிகரய்யர்,
தமிழ்ப்பண்டிதர், தீர்த்தபதி ஹைஸ்கூல்,
அம்பாசமுத்திரம்.

# பொருளடக்கம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்களந்தைப் புராண வசனச் சுருக்கம்.

---

## விநாயகர் துதி.

சத்திசிவ மெனமருவு தற்பரமெய்ப் பொருளாம்
நித்தியநின் மலபரனை நித்தியமு மகலாச்
சித்தியரு ளுமையுதவு தெய்வபர முதலாம்
அத்திமுக னடிமலரென் னகத்துளலர்ந் திடுமே. 1

## கறுத்த விநாயகர் துதி.

வேறு.

நிறுத்தருள் சுரந்திடு நிமலன் றன்னையுட்
பொறுத்தமர் களந்தையின் புராணம் புண்ணியம்
உறுத்தபே ரன்பினு ளுவந்து ரைத்திடக்
கறுத்தவி நாயகக் கடவுள் காப்பதே. 2

## சத்தியவாகீசர்.

வேறு.

சந்திர வேணி யானைத் தண்களந் தையினில் வாழு
மந்திர வடிவி னானை வானவர்க் கருள்செய் வானைச்
சுந்தர மான சத்ய வாசகச் சுருதி யானைப்
புந்தியி லிருத்தி நாளும் போற்றுதல் புரிகு வாமே. 3

## கோமதியம்மை.

காமதி குழலு மன்பு கருதிய விழியுங் கஞ்ச
மாமதி முகமுங் கோங்கு வளர்முகைத் தனமும் வாய்மை

யாமதி மெய்ய ருள்ளத் தகன்றிடா வடியுங் கொண்ட
கோமதி யுமையாள் பாதங் கும்பிட்டு வணங்குவாமே. 4

சபாபதி.

எண்ணிய பேற்றை யெய்த விருவர்தா மெண்ணில் காலம்
பண்ணிய தவத்துக் காகப் பரன்றிருத் தில்லை மன்றுள்
நண்ணிய நடனம் போலு நலந்தரு களந்தை யுற்ற
புண்ணியப் பொதுவி லாடும் பொற்பதம் போற்றி வாழ்வாம்

---

## புராண வரலாறு.

ஆதிகாலத்தில் ஸ்ரீ கைலாயமலையில் வெகு அற்புதமான ஓர் ஆலமரத்தின் நிழலில் வீற்றிருந்தருளிய சிவபெருமான், தமது ஞானமயமான சரித்திரங்களை ஸ்ரீ பார்வதிதேவியாருக்கு உபதேசம் செய்தருளினர். அப்பொழுது அப்பிராட்டியாரின் மடியிலெழுந்தருளியிருந்த ஸ்ரீ கந்தப்பெருமான் அவைகளையெல்லாம நன்ருய் அறிந்து கொண்டனர். அப்படியவர் தெரிந்து கொண்டதைப் பிரமதேவனுக்குக்கூறினர். அவர் அகத்திய முனிவனுக்குச் சொல்லினர். அவர் சனத்குமாரருக்கு விளம்பினர். அவர் வேதவியாசருக்கு ஓதினர். அவர் சூதமுனிவருக்கு விளங்கக்கூறி அச்சரித்திரங்களை பதினெட்டுப் பாகமாகப்பிரித்தனர்.

அவைகளுள், இலிங்கம், சைவம், பௌடியம், மார்க்கண்டேயம், கூர்மம், மச்சம், வாமனம், வாராகம், காந்தம், பிரமாண்டம் என்னும் இப்பத்தும் சிவபுராணங்கள். காருடம், நாரதம், விஷ்ணு, பாகவதம் இந்நான்கும் விஷ்ணு புராணங்கள். பிரமம், பதுமம் இவ்விரண்டும்

பிரம்ம புராணங்கள். ஆக்நேயம், அக்னிபுராணம். பிரம்ம கைவர்த்தம், சூரிய புராணமாகும்.

இப்புராணங்களுள் பிரமாண்ட புராணத்தில் சம்மிதை ஆறு. இந்த ஆறனுள் சங்கர சம்மிதையில் வைபவ காண்டத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் கூறப்பட்டிருப்பதே இக்களந்தைமாநகரத்துப் புராணமாகும்.

ஒருகாலத்தில் பலமுனிவர்களும் பிரமலோகத்திற்குச்சென்று பிரமனை "வணங்கி நாங்கள் செய்யுந்தவம் நாளுக்கு நாள் விருத்தியாவதற்குத் தகுதியான இடமொன்றை நியமித்து அருளல் வேண்டும்" என்று கேட்டனர். அதற்கு அவர், தன் கையிலுள்ள தர்ப்பத்தைச் சக்கிரம் போல கட்டி பூமியில் உருட்ட அது உருண்டு அங்கு ஓர் காட்டில் விழுந்தது. அதுதான் 'நைமிசாரண்யம்' என்று சொல்லப்படுகிறது. அங்கு முனிவர்கள் யாவரும் சென்று பன்னிரண்டு ஆண்டாகச் சத்திரயாகத்தைச் செய்தனர். அக்காலத்தில் சூதமுனிவரும் அங்கு எழுந்தருளினர். அவரைக்கண்ட முனிவர்கள் சந்திரனைக்கண்ட சமுத்திரம போல் ஆரவாரத்துடன் எதிர்கொண்டழைத்து ஆதனத்தில் உட்காரச்செய்து புகழ்ந்து பூசித்து வணங்கிச் சொல்வாராயினர்.

ஓ முனி புங்கவரே! "இதற்கு முன் உம்மிடமிருந்து அனேக புண்ய சரித்திரங்களையெல்லாங்கேட்டு அறிந்து கொண்டோம். இன்னமும் கேட்க ஆசையுடையவர்களாயிருக்கிறோம். அருள்வீராக" எனலும், சூதர் அவர்களை நோக்கி;"பூலோகத்தில் சிவதலங்கள் ஆயிரத்தெட்டாகும். அவைகளுள் பிரமாண்ட புராணத்தால் விசேடித்துச் சொல்லப்பட்டதலம் "சோரகாடவி" என்பதும்

ஒன்று" என்றருளினர். இதைக்கேட்டதும் முனிவர்கள் "அத்தலத்திற்குரிய தீர்த்தம், மூர்த்தி, தலம் ஆகிய இவைகளின் விசேடங்களைத் தெளிவாய்க்கூறல் வேண்டு" மெனவே சூதர் கூறலாயினர்.

---

## தலவிசேடம்.

பராபரனாகிய சிவபெருமான் திருவருளினால் சத்தி தோன்றினள். அச்சத்தியினிடத்திலிருந்து விராட் புருடன் வெளிப்பட்டான். அவனுடைய கண்டத்தானமாதலால் இந்நகரத்திற்குக் "களந்தை" யென்ற பெயரும், மலையரசனாகிய வைரவன், அகத்திய முனிவர் கிருபையால் "வைரவி" என்ற மகளைப்பெற்று வளர்த்து ஸ்ரீகைலை நாயகருக்குக் கல்யாணம் செய்து கொடுத்த காரணத்தால் "வைரவநக" ரென்றும், சாமளமலைக்கரசனாகிய சாமள வேந்தன் அகத்திய முனிவரைவேண்டிக்கொள்ள அவரும் தனது கமண்டலத்திலுள்ள கங்காசலத்தைச் சாமள நதியாகப்பிரவாகிக்கும்படிச் செய்த காரணத்தால் "சாமள நகர" மென்றும், ஒரு பாண்டிய ராசனுக்குச்சோழராசன் தன் மகளாகிய வல்லி என்பவளை விவாகம் செய்து கொடுக்குங்காலத்தில் இவ்விடத்தைச் சீதனமாகக் கொடுத்த காரணத்தால் "வல்லிபுரமெ"ன்றும், ஆதியில் வேதங்களெல்லாம் புன்னைமரங்களாக நின்று இங்குச் சிவபெருமானைப் பூசித்ததால் "புன்னைவனக்ஷேத்திர" மென்றும், ஸ்ரீஇராமன் காட்டிற்கு வந்த காலத்தில் அவர் மனைவியாகிய சீதையை இராவணன் இந்தக்காட்டில் திருடிக்கொண்டு போன காரணத்தால் "சோரகாரணியம்" எனவும், புரகரபுரி எனவும் இத்தலத்திற்குப் பெயர்கள் வழங்கி வருகின்றன.

இந்த தலத்தை வாயினு லுச்சரித்தவரும், இருப்பிடமாகக்கொண்டவரும், திருவாதிரை, மாசிமகம், விஷுபுண்ய காலங்கள், மற்றுமுள்ள விசேட தினங்களிலும், இந்தத்தலத்திற்கு வந்து ஸ்வாமி சத்திய வாகீசுரரோடு அம்பாளையும் பூசித்து வணங்கினவர்களும் இம்மை மறுமைக்குரிய பயன்கள் எல்லாவற்றையும் அடைவார்கள்.

---

## தீர்த்த விசேடம்.

ஒரு காலத்தில் கந்தர்ப்பம் என்னும் மலையில்தவஞ் செய்துகொண்டிருந்த 'இரேணு' என்னும்முனிவன் கங்காதேவியைமகளாகப்பெறக்கருதி ஸ்ரீசிவபெருமானைப்பற்றித் தவஞ்செய்ய, அதற்கு அக்கடவுள் அவ்வாறே பெறக்கடவையென்றருளி, தமது சடாபாரத்திலுள்ள கங்கையை ஏவ, அக்கங்கையும் பார்வதி தேவியின்உத்தரவினால் அந்த இரேணுமுனிபக்கத்தில் ஓர்மகளாக விளங்கினாள். இப்படியிருக்கையில் வைரவமலைக்கரசனான வைரவவேந்தன் அம்முனிவனை வணங்கி "உமதுமகளை எனக்குத்தந்தருளவேண்டுகின்றேன்" என்னலும், அதற்கிசைந்த முனிவனும் அக்கன்னிகையை அவனுக்குக்கொடுத்தான். பெற்றுக்கொண்ட அவ்வரசனும் அவளை வளர்த்து வருகையில் திடீரென்று அவள் காணமல் போய்விட்டனள். அரசன் அவள் பிரிவிற்கு ஆற்றுமல் தீயில் மூழ்கி இறக்கயத்தனிக்கையில், சிவபெருமான் அக்கன்னிகையுடன் அவன் முன் தோன்ற அவன் அவரை வணங்கினன். அப்பொழுது கடவுள் அசரீரியாய் அரசனே! 'நீ இவளை அக்கினிசாட்சியாய் எனக்கு விவாகம் செய்து கொடு' என்றருள, அவனும் அவ்வாறே செய்தான். அப்பால் கண்ணுதற்பெருமான் அவ்வரசன் கேட்டுக்கொண்டபடியே தனதுசடையிலுள்ள கங்கையை

அங்கு ஒரு நதியாக ஓடும்படிச் செய்தனர். பிறகு மவ்வரசன் வேண்டிக்கொண்டபடியே "தன் பெயர் வைரவலிங்கமென்றும், அந்நதி வைரவநதியென்றும் விளங்கக்கடவன" என்றருளினர்.

அப்பால் சாமளன் என்னும் அரசன் அகத்திய முனிவனை வணங்கி அவர் கமண்டலத்திற் கொண்டுவந்த கங்கையைத் தன் பெயர் விளங்கச் "சாமளநதி" யென்ற பெயருடன் இங்கு ஓடும்படிச் செய்ய வேண்டுமென்று கேட்க அவரும் அவ்வாறே செய்தார். ஆகவே அவ்விரண்டு நதிகளும் இந்நகருக்கு ஓர் ஆரம்போன்று விளங்குகின்றனவாம்.

இந்த நகரின் வடமேற்கு மூலையில் உள்ள நந்தவனத்தில் பூ வெடுக்கச்சென்ற அடியார்கள், அங்கொரு மானத தடாகம் இருத்தலையும், அதன் கரையில் திருமால் க்ஷேத்திரமிருப்பதையும், தேவர்களும் முனிவர்களும் கூட்டமிட்டிருப்பதையுங்கண்டு அரசனுக்கறிவித்தனர். உடனே அவனும் அங்கே சென்று எல்லாவற்றையுங்கண்டு ஆச்சரியங்கொண்டான். அங்கேயிருந்த அகத்திய முனிவனையும் சுக முனிவனையும் தெரிசித்து இத் தடாகத்தின் விசேடங்களைச்சொல்லவேண்டுமென்று கேட்க, அவர்கள் அரசனே! "இத்தடாகத்தின் பெயர்கள், மானத தடாகமென்றும், புண்ணிய புஷ்கரணியென்றும், பொற்றாமரை யெனவும் சொல்லப்படும். இதில் மூழ்கினவர்கள் நினைத்தவை யெல்லாம் எளிதில் அடைந்து கொள்வார்கள்." என்றருளி மேலும் சொல்லுவாராயினர்.

வேந்தே! வைரவியை நம்பெருமானுக்குக்கல்யாணம் செய்து கொடுக்கும் பொழுதே இத் தீர்த்தம் உண்டாயிருக்கிறது. இதில் நீராடியவர் பெறப்பட்ட நன்மைகளுக்கு ஓரளவே இல்லை.

ஆதிகாலத்தில் தருமயோகியென்பவர் இதில்மூழ்கிச் சிவனைப் பூசித்ததால் இதற்குத்தருமதீர்த்தமென்று ஒரு பெயருண்டு, அன்றியும் ஆதிதீர்த்த மென்றும், ஞானதீர்த்தமென்றும், சின்மயதீர்த்தமெனவும், விரத தீர்த்தமெனவும், சத்தியதீர்த்தமெனவும், நேசதீர்த்தமெனவும், திருவளர் தீர்த்தமென்றும், ஆனந்ததீர்த்தமென்றும் பெயர்களையுடையதாய் இது விளங்குகின்றது. இதில் மூழ்கி ஸ்ரீமகாதேவரை வணங்கியவர்கள் எல்லாப்பயன்களையும் அடைகிறார்கள். அயன காலங்களிலும், விஷுபுண்ணிய காலங்களிலும், மார்கழி மாதத்திலும், மாசிமகத்திலும் கிரகண காலங்களிலும், தைப்பூசத்திலும் இதில் மூழ்கிப் பூசை செய்பவர்களும் செபங்கள் செய்பவரும், தானம் செய்பவர்களும் எல்லா நன்மைகளையும் இனிதினடைவார்கள். மேலும் இந்தத்தீர்த்தத்தில் நீராடிய பூமகள், ஒரு வேதியன், ஒரு வேடன் ஆகிய இவர்கள் மேன்மையை அடைந்திருக்கிறார்கள்.

## மூர்த்தி விசேடம்.

முன் வைரவ வேந்தன் மகளாகிய வைரவியை மணஞ்செய்துகொண்ட சிவபிரான், முன் அருளியபடி வைரவக்கங்கையோடு புன்னைக்காவனத்தில் பஞ்சகரணி தீர்த்தக்கரையில் எழுந்தருளிவிளங்கினர். அப்பொழுது வைரவ வேந்தன் அப்பொற்றாமரையில் நீராடி அத்தீர்த்தத்தாலேயே மகாஇலிங்கத்திற்கபிஷேகஞ் செய்து பூசித்து வணங்கித்தோத்திரம் செய்தனன். செய்யவே சிவபிரான் விருடபாரூடராய் அவன்முன் எழுந்தருளி, அரசே! "நீ நமது பரையையும்பணியக்கடவாய்" என்றருள, அவன் கோமதிநதிக்கரையிற் செல்லுகையில், அங்கே தனக்குத் தெரிசனங்கொடுத்த பரையாகியகோமதிதேவியை வணங்கி

அழைத்து வந்து சிவபெருமான் பக்கத்தில் எழுந்தருளச் செய்தனன். பெருமானும் அந்த அம்பிகையைக்கண்டு ஆனந்த மெய்தினர். அரசன் அக்கடவுளுக்கு ஓர் ஆலயம் திருப்பணி செய்து போற்றினன்.

இந்த மஹாலிங்கத்துக்குள்ள திருநாமங்கள் பல. வேதங்கள் புன்னை மரமாய்நின்று பூசித்ததால் புன்னைவன நாதன் என்றும், திருமால் வணங்கியதால் சீதரேசன் என்றும், மலைவந்து வணங்கியதால் பூதரேசன் என்றும், திரிபுரத்தைச் சங்காரம் செய்தலால் திரிபுரஹரனென்றும், பிரமன் பூசித்ததால் பிரமநாயகன் என்றும், சூரியன் போற்றியதால் பரிதிநாயகனென்றும், அகத்தியர் பூசித்ததால் அகத்தியலிங்கம் எனவும், இந்திரன் பூசித்ததால் சத்திய வாகீசர் எனவும், சுகமுனிவர் போற்றியதால் சுந்தர இலிங்கமெனவும், சோமை மகா இலிங்கமெனவும், விராட் புருஷன் கண்டத்தானத்திலிருப்பதால் களந்தை இலிங்கமெனவும், வைரவஇலிங்கமெனவும், வீரமார்த்தாண்ட இலிங்கமெனவும், புகழப்படுகின்றனர். சாமளநதியின் பக்கத்திலுள்ள சாமளமகா இலிங்கமூர்த்தி, குலசை நாயக மூர்த்தி, மூலமகா இலிங்கம், சுந்தரேசன், சௌந்தரபாண்டியமூர்த்தி, தேவஇலிங்கம், சோமநாயகர், களந்தை வெற்பில் எழுந்தருளியிருக்கும் வைரவநாதர், இரேணு முனிவர் பூசித்த கைலாயநாதர் ஆகிய இக்கடவுளர்களுக் கெல்லாம் மேன்மையாய் விளங்கும் பெருமான் சத்தியவாகீசுரரேயாவர். இத்தலங்களைத்தெரிசித்தவரும், இடமாகக் கொண்டு வசித்தவரும், மூர்த்திகளைப்பூசித்தவரும் இம்மை மறுமைக்குரிய பலன்கள் எல்லாவற்றையும்இலகுவாய் அடைந்து மகிழ்வார்கள்.

---

# திரிபுரச் சருக்கம்.

ஆதிகாலத்தில் தாரகன் என்று பெயருள்ள ஓர் அசுரன் இருந்தான். அவனுக்கு மூன்று பிள்ளைகள். மூத்தவன்பெயர் வித்துர்மாலி, இரண்டாமவனுக்குக் காருளத்தன் (மகராக்ஷன்) என்று பெயர். மூன்றாமவன் பெயர் கமலாக்ஷன். இம்மூவரும் மிகுந்த பலசாலிகள், மதயானை போன்றவர்கள், கொடிய பாவிகள், என்றாலும் இவர்கள் நாள்தோறும் சிவபிரானைப்பூசித்து வணங்கும் விரதம் உடையவர்களாயிருந்தார்கள்.

இப்படியிருக்கும் இவருக்கு உலகமெல்லாம் தாங்களே அரசாளவேண்டுமென்ற ஆசையுண்டாயிற்று. உண்டாகவே அவர்கள் தமது குலகுருவாகிய சுக்கிராசாரியாரிடத்திற்சென்று அவரை வணங்கித் தங்கள் எண்ணத்தைத் தெரிவித்தனர். அதற்கு அவர் “நீங்கள் மூன்று பேர்களும் இப்பொழுதே மகாமேருமலையிற் சென்று பிரமதேவனைப்பற்றித் தவம் செய்வீரானால் உங்கள் எண்ணம் நிறைவேறும் செல்லுங்கள்” என்று சொல்ல அவர்களும் அப்படியே மேருமலையிற் சென்று நாலுபக்கங்களிலும் தீயை எரியவிட்டு நடுவில் நின்று ஊணும் உறக்கமுமில்லாமல் அனேகாயிரவருடங்கள் தவசு செய்தார்கள். இப்படி இவர்கள் வெகு கடுமையான தவம் புரிந்தும் பிரமன் அவர்கள் முன் வரங்கொடுக்கவரவில்லை என்றாலும் அசுரர் கொஞ்சமும்சடையாமல் மூச்சையடக்கி மறுபடியும் மிகமிகக்கொடுமையான தவங்களைச் செய்யத்தொடங்கினர் தொடங்கவே அவருடைய மண்டையோடுகள் வெடித்துவிட்டன. அந்த வெடிப்பின் வழியாகத் தபாக்னி வெளிப்

பட்டுப் பூவுலகத்தையும் வானுலகத்தையும் எரிக்கத்தொடங்கியது. இந்த வெம்மை பொறுக்கமாட்டாத தேவர்கள் பிரமனை வணங்கித் தங்களுடைய கஷ்டங்களைத்தெரிவித்து வேண்டிக்கொள்ள அவரும் அப்படியே அத்துன்பங்களை நீக்குவதாய்ச் சொல்லி அவர்களை யனுப்பிவிட்டார். அவர்களும் தங்கள் உலகம் போய்ச்சேர்ந்தார்கள்.

அப்பால் அந்த நான்முகக்கடவுள் மேருமலையில் அந்த அசுரர்கள் முன் சென்று, "உங்கள் தவத்தை மெச்சினோம். உங்களுக்கு வேண்டியவை என்ன" வென்று கேட்டார். உடனே அசுரர்களும் அவரை வணங்கித் துதித்து ஓ படைக்குங்கடவுளே! "மூன்று உலகங்களையும் நாங்களே அரசாளவேண்டும். வல்லமைவேண்டும். அளவில்லாத செல்வம் வேண்டும். எப்படிப்பட்ட ஆயுதங்களாலும் நாங்கள் இறக்கக்கூடாது. திரிபுரம் என்றோர் பட்டணம் வேண்டும். அந்தப்பட்டணத்துக்குத் தங்கத்தாலும் 'வெள்ளியாலும்' இரும்பாலும் மூன்று கோட்டைகள் இருத்தல் வேண்டும். அதற்குள்ளிருக்கும் நாங்கள் நினைத்த இடமெல்லாம் ஆகாய வழியாக அக்கோட்டையுடன் பறந்து செல்லவேண்டும். சிவபெருமானாலும் அக்கோட்டையோடு எங்களையும் அழிக்க முடியாதபடி ஓர் வரமும் வேண்டும். தருவீராக" என்றனர். அதற்குப்பிரமதேவர் அவுணர்களே! "அழிவில்லாத வரம் அந்த மகாதேவரால் அல்லாமல் வேறு எவராலும்கொடுக்கமுடியாது. ஆதலால் அது ஒன்று நீங்கலாக மற்றைய வரங்களெல்லாம் நீங்கள் விரும்பிய படியே கொடுத்து விட்டனம்," என்றருளித் தன்னுலகம் சார்ந்தனர்.

பிரமன் சென்ற பிறகு அந்த அசுரர் மூவரும், மயன் என்னும் தச்சன், முன் சொன்னபடி பட்டணமும்

கோட்டைகளும் செய்து கொடுக்கப்பெற்றுக்கொண்டனர். மிகுதியான சேனைகளையுஞ்சேர்த்துக்கொண்டனர். அந்தக் கோட்டையுடன் பறந்துசென்று பூவுலகத்திலும், வானுலகத்திலும், பாதாள உலகத்திலும் உள்ள எல்லாப் பிராணிகளேயும் சகிக்க முடியாதபடி வருத்தப்படுத்தினர். மலைகளிலுள்ள முனிவர்கள் செய்யும் தவத்தைக் கெடுத்தனர். யாகங்களை அழித்தனர். இன்னுமவர் செய்த பழிபாவங்கட்கு ஓர் அளவேயில்லை. என்றாலும் இவர்கள் சிவபூசை செய்வதை மாத்திரம் கைவிடவில்லை.

திரிபுரத்தசுரர்களால் செய்யப்பட்ட கஷ்டங்களை பொறுக்க முடியாத தேவர்கள், "தம்மை இத்துன்பத்திலிருந்து காப்பாற்றப்பட்ட கடவுள் சிவபெருமானே அன்றி வேறு ஒருவருமில்லை" யென்று நிச்சயித்து, திருக்கைலாயமலைக்குச் சென்று சிவனைப்பற்றித் தவஞ்செய்ய அவர்முன் தோன்றிய கண்ணுதற்கடவுள், அவர்களைப் பார்த்துத் திரிபுரத்து அசுரர்கள் செய்யும் துன்பத்தினின்று நீங்கவேண்டுமானால் இப்பொழுதே நீங்கள் பொதியமலையின் தென் கிழக்குத்திசையிலுள்ள புன்னைவனத்திலிருக்கிற களந்தை என்னும் தலத்திற்சென்று அங்கு 'வைரவேசுரர்' என்னும் திருநாமத்துடன் எழுந்தருளியிருக்கும் நம்மை அங்குள்ள கோமதிநதியில் நீராடி முறைப்படி பூசிக்க வேண்டும். இப்படிச் செய்தால் நாம் அந்தத் திரிபுரத்தாரை அதஞ்செய்து உமது துன்பத்தைப்போக்குவோம் செல்லுங்கள்" என்றருள, அவர்களும் அவ்வாறே புன்னை வனத்திலுள்ள களந்தையில் வந்து வைரவமஹாலிங்கத்தை அர்ச்சித்து வணங்கலாயினர்.

இப்படித் தேவர்கள் வந்தனை வழிபாடு செய்து வருவதை நந்திதேவர் சிவபிரானுக்கு அறிவித்தலும் "சிவபிரான் இந்தத் திரிபுரத்தைத் தொலைக்க நாமோ வேண்டும்; திருமாலே போதுமானவராவர். அவரையே அழைத்துச் செல்லும்படி தேவர்களுக்கு நீ சொல்" என, அவரும் அவ்வாறே சென்று கூறினர். பிறகு தேவர்கள் ஸ்ரீ நாராயணக் கடவுளிடம் தமது குறைகளைச் சொல்லிக்கேட்டுக் கொண்டனர். அதற்கு அவர் "பயப்பட வேண்டாம்" எனத்தேவர்களையனுப்பிவிட்டு, "சிவபெருமானல்லாமல் வேறு எவராலும் திரிபுரத்தை அழிக்கமுடியாதென்றும் திரிபுரத்தசுரர்கள் சிவபூசை செய்தலை விட்டாலன்றிச் சிவபெருமான் திரிபுரத்தை நாசம் செய்யமாட்டார்" எனவும் பிரமதேவனால் அறிந்துகொண்டு தான் ஓர் சமண முனியாக வேடம் மாறி நாரதமுனிவனைத் தனக்குச்சீடராக்கிக் கொண்டு உடன் வரச்செய்து திரிபுரக்கோட்டைக்குள் புகுந்து அங்குள்ள தெருக்கள்தோறும் பாழான சமண மதத்தைப்பற்றிப்பிரசங்கம் செய்யத்தொடங்கினர். இந்தப் பிரசங்கத்தைக் கேட்ட தாரகாக்ஷன் முதலிய மூவரும் மற்றுமுள்ள அசுரர்களும் மதிமயங்கிச்சிவபூசை செய்தலை மறந்து விட்டனர். செய்யாத தீமைகளெல்லாம் செய்யலாயினர். இவர்கள் இப்படிப்பாவிகளாய்ப் போய்விட்டதைத் தெரிந்த சிவபிரான், பூமியைத் தேராகவும், சந்திர சூரியர்களைத் தேர்ச்சக்கரமாகவும், நான்கு வேதங்களையும் குதிரைகளாகவும், தேவர்களைச் சேனைகளாகவும், பிரமதேவனைச் சாரதியாகவும், திருமாலை அம்பாகவும், மேருமலையை வில்லாகவும், வாசுகி என்ற பாம்பை நாணாகவும் செய்துகொண்டு திரிபுரமிருக்கும் திசையைநோக்கித் தேரை நடத்தலானார். அப்பொழுது ஒவ்வொருதேவர்களும் "திரிபுரத்தை வெல்ல நம்முடைய உதவிகளும் சிவபெரு

மானுக்கு வேண்டியதாய்த் தானிருக்கிறது" என்று நினைத்தார்கள். இதனைத்தெரிந்த பரமன் தன்னுடைய வல்லமையை யாவரும் அறிந்து கொள்ளும் பொருட்டுக் கொஞ்சம் சிரித்தனர். சிரிக்கவே அச்சிரிப்பிலிருந்து வெளிப்பட்ட தீயானது அத்திரிபுரத்தை அசுரரோடு சாம்பலாக்கிவிட்டது. சிவபிரானும் மறைந்தருளினர்.

அப்பால் திருமால் பிரமன் முதலான எல்லாத்தேவர்களும் சிவபிரான் வல்லமையைப்பற்றி தீங்காக நினைத்த நினைப்பினை எண்ணி மனவருத்தமுற்றார்கள். நன்றி மறந்த பாவத்தைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு அவர்கள் யாவரும் புன்னைக்காவிலுள்ள புரமெரித்த பெருமானை அருச்சனை இயற்றி வணங்கித் தோத்திரம்செய்து தாங்கள் புரிந்த அபராதத்தைப் பொறுத்தருளுமாறு பிரார்த்தித்தனர். அப்பொழுது ஸ்ரீ காளகண்டப்பெருமான் அவர்முன் தோன்றி அவர்கள் வேண்டிய வரங்களைக் கருணையுடன் கொடுத்தருளி அந்த மஹா இலிங்கத்தில் மறைந்தருளினர்.

---

## சோரகாடவிச் சருக்கம்.

---

ஆதிகாலத்தில் 'இலங்கை' என்னும் பட்டணத்தில் 'இராவணன்' என்ற ஓர்இராக்ஷசராஜனிருந்தான். அவன் சிவபிரானைப்பற்றித் தவம் செய்து அநேக வரங்களைப் பெற்றுப் பலவானாகி மூன்று உலகங்களையும் அரசாண்டு வந்தான். வருகையில் "பாதாள உலகத்திற் காலகேயர் என்ற அசுரர் இருப்பதாயும், அவர் மிகுந்த வல்லமையுள்ளவர்கள்" என்றும் கேள்விப்பட்டான். கோபங்கொண்டு

அவர்களையும் வெல்ல நினைத்து, தனது தங்கையான சூர்ப் பனகையின் கணவனாகிய 'மது' என்பவனை அழைத்துப் பல சேனைகளையும் அவனிடம் ஒப்புவித்துக் காலகேயரை ஜெயித்துவர அனுப்பினான். உடனே அவனும் பாதாளஞ் சென்று காலகேயருடன் போர்செய்து அவரால் போரில் இறந்து போய் விட்டான். இப்படிக்கணவன் இறந்து போய் விட்டதைக் கேட்ட சூர்ப்பனகை, தனது அண்ணன் முன் வந்து "அநியாயமாய் என்புருஷனைக் கொன்று விட்டாயே" என்று கதறி அழுது கண்ணீர் விட்டாள். அப்பொழுது இராவணன் அவளைப் பார்த்து "நீ இனி உலகத்தில் எவரை வேண்டுமோ அவரைக் கணவனாக்கிக் கொண்டு சுகமாய் வாழ்வாயாக வருத்தப்படாதே" என, அவளும் தனக்குத் தோன்றியபடியெல்லாம் திரிந்து கொண்டு வரலாயினள்.

இவள் இப்படித்திரிந்து கொண்டிருக்கையில் அசுரருக்குக்குருவாகிய சுக்கிராசாரியார் என்பவர் தன் மனைவிக்கும் அசுரர்களுக்கும்கொடுமை செய்ததிருமாலை 'நீ பூமியில் மனிதனாய்ப் பிறக்கக்கடவாய். உன் மனைவியையும் ஓர் இராக்கதன் எடுத்துக்கொண்டு போகக்கடவன்" என்று சபித்தார். இந்தச்சாபத்தின்படி அந்தத்திருமால் அயோத்தியிலிருந்த தசரதராசனுக்கு மகனாய்ப்பிறந்து சீதையென்னும் திருமகளைக் கல்யாணம் செய்து கொண்டனர். அப்பால் இராமரும் 'சீதையும்' இலக்குமணரும் தமது சிற்றன்னையாகிய கைகேசியின் சொற்படி தகப்பன் உத்தரவினால் வனவாசஞ் செய்யப்போனார்கள். காட்டிலுள்ள பஞ்சவடி என்னும் இந்த இடத்தில் அவர்களிருக்கையில் அங்கே திரிந்து கொண்டிருந்த சூர்ப்பனகை இராமனுடைய அழகைக் கண்டு ஆசைப்பட்டு அவரிடத்தில் தன்னைக் கலியாணஞ்

செய்து கொள்ளும்படிக் கேட்டாள். அதற்கு அவர் "எனக்குச் சீதை யென்ற மனைவி இதோ இருக்கிறாள்; ஆதலால் நீ வேறு யாரையாவது பார்த்துக்கொள்" என்றார். அப்பாலவள் இலக்குமணனிடத்தில் தன்னை மணந்து கொள்ளும்படி கேட்டாள். அவனும் மாட்டேனென்று சொல்லிவிட்டான். பிறகு அவள் "சீதையை எப்படியாவது எடுத்து விழுங்கி விட்டால் இராமன் தன்னை மணந்து கொள்வான்" என்று நினைத்து அந்தச் சானகியின் கிட்டப்போய் அவளைத் தூக்கினாள். அது கண்ட இலக்குமணன் அந்த அரக்கியின் மூக்கையும், காதையும் அறுத்து விட்டான். இப்படி மூளியான அந்தச் சூர்ப்பனகை, கோ! என்று கதறிக்கொண்டு அந்தக்காட்டிலிருந்த கரன், தூடணன், திரிசிரசு என்னும் இராக்கத அரசர்களிடம் சென்று முறையிட்டாள். உடனே அந்த அரக்கர்களும் சேனையுடன் வந்து இவரைச்சூழ்ந்து சண்டை செய்ய அவர்கள் யாவரையும் அவர் கொஞ்ச நேரத்திற்குள் கொன்று விட்டனர்.

இப்படி அக்கரன் முதலாயினோர் இறந்ததைக் கண்டசூர்ப்பனகை அங்கு நின்றும் புறப்பட்டுஇலங்கையிற் சென்று இராவணன் முன் அலறிவிழுந்து நடந்ததையெல்லாம் தெரிவித்தாள். இவைகளைக்கேட்ட இராவணனும் மிகுந்த கோபங்கொண்டு "தமது மாமனாகிய மாரீசனால் அந்த இராமனைக்கொன்று சீதையைக்கவர்ந்து வருவேன்" என்று துணிந்து மாரீசனைக் கண்டு தான் நினைத்ததைத் தெரிவித்தான். அதற்கு அவன் இராமன் திருமாலின் அவதாரமென்றும், இலக்குமியே சீதாதேவியென்றும் இவரிடத்தில் உன் வல்லமை செல்லாதென்றும், பலவிதமாகச் சொல்லியும் இராவணன் கேளாமல் கோபங்கொண்டு சீறி

ஞன். இப்படி இராவணன் கோபங்கொண்டதைக் கண்டு அஞ்சி மாரீசன் அவன் சொற்படி ஓர் பொன்மானுக வேடங்கொண்டுபோய்ச் சீதை காணும்படித் துள்ளிவிளை யாடலானுன். அதைப்பிடித்துத் தரவேணுமென்று சீதை இராமனைக்கேட்டாள். இராமனும் அவ்வாறே மானைப் பிடிக்கத் தொடர்ந்தான் பிடிக்கமுடியவில்லை. உடனே இராமன் ஓரம்பை அந்த மானின்மேல் எய்தான். எய் யவே அது "ஹே! சீதே! இலக்குமணு!" என்று கூப்பிட் டுக்கொண்டே விழுந்து இறந்தது. அது போட்ட சத்தத் தைக் கேட்ட சீதை இராமருக்கு ஏதோ தீங்குவந்துவிட்ட தாக நினைத்து இலக்குமணனை, பார்த்து வரச்சொன்னுள். அவனும் அப்படியே வெளியிற் போய் விட்டான். சீதை தனித்திருந்த அந்தச் சமயத்தில் இராவணன் சன்னியாசி வேடத்துடன் அங்கு வந்து அவளைத் தூக்கித் தேரில் வைத்துக்கொண்டு இலங்கையிற் கொண்டுபோய்ச் சிறை யில் வைத்துவிட்டான்.

இராவணன் சீதையைக் களவாடிச்சென்ற இடம் இந்த இடம். ஆதலால் இந்தத் தலத்திற்குச் சோரகாடவி என்று பெயர் வந்தது. இராமனைத் தேடி வந்துகொண் டிருந்த இலக்குமணனை இராமன் கண்டு "ஏன் சீதையைப் பிரிந்து வந்தாய்!" என்று சொல்லி வருத்தப்பட்டான். பிறகு அந்த இரண்டு பேர்களும் சீதையைக் காணுதவர் களாய்க் கவலைகொண்டு இந்த வனத்தில் நடந்து வருகை யில் அங்கோர் புன்னை மரத்தின் நிழலில் சிவபெருமான் தேவியாரோடு எழுந்தருளி இருப்பதைக்கண்டு "இனி நமது துன்பம் நீங்கிவிட்ட"தென்று துணிந்து அக்கட வுளை வணங்கித் துதித்து, தம்முடைய வரலாறு அனைத் தையும் சொல்லி "எங்களுடைய மனக்கவலையைத் தீர்க்க

வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அப்பொழுது அந்தப் புன்னைவன இலிங்கப்பெருமான் அசரீரியாய் "ஓ ராசகுமாரர்களே! இனி நீங்கள் வருத்தப்படவேண்டாம்; உங்களுக்குத் துன்பம் செய்தவனைக் கொன்று சீதையை அடைந்து கொள்வீர்கள்" என்றருள, அவர்களும்அந்தச் சத்திய வசனத்தை மனமார நம்பிக்கொண்டு அப்பால் சென்றனர்.

அப்பால் அவர்கள் சுக்கிரீவனைச் சினேகம் கொண்டு ஹனுமானால் சீதையிருக்குமிடத்தை யறிந்து இராவணனைச் சண்டையில் கொன்று சீதையை அழைத்துக் கொண்டு திரும்பினர். வரும் வழியில் இராவணனைக் கொன்ற பாவம் நீங்க இராமேசுவரத்தில் ஓர் இலிங்கத்தை பிரதிட்டைசெய்து பூசித்து மீண்டு நன்றிமறவாதவராய் இந்தப் புன்னை வனத்தில்வந்து களந்தைநாயகரைப் பூசித்து வணங்கிக் கடவுளே! "உம்முடைய சத்திய வசனத்தினால் நாங்கள் எல்லா நன்மைகளையும் அடைந்துவிட்டோம். ஆதலால் உமக்குச் சத்தியவாகீசப்பெருமான் என்றபெயர் எக்காலத்தும் விளங்கவேண்டும்." என்று கேட்டுக்கொள்ள கடவுளும் அந்த இலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு, "நீங்கள் இட்ட பெயரே எனக்கு வழங்கக்கடவது, இனி நீங்கள் சுகமாய் வாழ்வீர்கள்" என்றருள, அவர்களும் அவரை வணங்கி அயோத்தியை யடைந்து அரசாட்சி செய்து வந்தார்கள்.

---

## அரக்கன் மோசனச் சருக்கம்.

---

சமுத்திரக் கரையில் ஓர் ஊரில் விப்பிரன் என்ற பிராமணனிருந்தான். இவன் "பழி பாவங்களெல்லாம் ஓர்

வடிவு எடுத்தது" என்று சொல்லும்படியாக வளர்ந்து வந்த தீயோன். இவன் பெற்றோருக்கும் துன்பம் செய்வான். குருவையும் இகழ்ந்து பேசுவான். கொலை செய்வான். வேட்டையாடிப்பிராணிகளை வதைப்பான். பெரியோர்களுக்குக் குற்றம் செய்வான். களவு செய்வான். அல்லாமலும், அரசனுடைய காரியங்களைப்பார்ப்பவன் போல் உலகத்துக்குந் துன்பங்களையுண்டாக்குவான். மேலும் இவன் கட் குடிப்பான். வஞ்சகம் செய்வான். தன்னுடைய வம்சத்தாரை வருத்தப்படுத்திப் பெண்களையும் கற்பழிப்பான். கெட்ட ஒழுக்கத்தொடு நன்றியும் மறந்துளான். இப்படி இவன் செய்த பாவச் செயல்களை அளவிட்டுக்சொல்ல ஒருவராலும் முடியாது. இவன் பெயரைச்சொன்னாலுங்கூடப்பெரியோர்கள் தங்கள் காதுகளைப் பொத்திக் கொள்வார்கள். நமனும் அஞ்சுவான். நரகமும் பயப்படும்.

இப்படி இவன் திரிந்துகொண்டிருக்கையில் செய்த பாவங்களெல்லாம் திரண்டு இவனுக்குக் குட்டநோயையும் வயிற்றுவலியையும் உண்டாக்கிவிட்டன. அதனால் அவன் யாரும் படாத பாடெல்லாம் பட்டான் என்றாலும்; களவும் வழிப்பறியும் செய்துகொண்டு தானிருந்தான். இவன் இப்படி இருத்தலைக்கண்ட அரசன் அவனைக் கழுவில் ஏற்றிக் கொன்றுவிட்டான். இறந்த இவனுயிரை இயமதூதர் கொண்டுபோய் வெகு நாள்வரைப் பற்பல நரகங்களிலும் தள்ளி வருத்தப்படுத்தினர். பிறகும் அவனை இன்னும் பல கஷ்டங்களை அடையவேண்டி பூலோகத்திற் பிறக்கும்படியும் தள்ளிவிட்டனர். அதனால்அந்தப்பாதகன் ஓர் இராக்கதனைகப் பூமியில் ஓர் காட்டில் பிறந்து வளர்ந்து

காடுகளிலுள்ள பிராணிகளையெல்லாம் கொன்று தின்று திரிந்து கொண்டிருந்தான். சில நாள் செல்ல அவனுக்கு அங்கே ஓர் உணவுங்கிடையாமல் களைத்துப்போய்விட்டான். பிறகு நல்ல காலம் அடுத்துவிட்ட காரணத்தால் அவன் இந்தப் புன்னைவனத்தின் நதிக்கரையில் வந்து சேர்ந்தான்.

இவனிப்படியிருக்கையில் ஓர் பிராமணன் சாமள நதியிலும் புட்கரணிதீர்த்தத்திலும் நீராடிப்பரிசுத்தமுள்ள வனாய் ஸ்வாமி கோமதிநாதரை வணங்கி, நதிக்கரையில் வந்தான். இப்படி வந்தவனை அரக்கன் கண்டான். காணவே அவனுக்குக் கொஞ்சம் அறிவு தெளிவடைந்தது. அடையவே, உடனே அவனும் அந்தத் தீர்த்தத்தில் மூழ்கினான். முழுகின அவன் கொண்டிருந்த களைப்பும் கிழட்டுத்தன்மையும் நீங்கி நல்ல தவசியின் வடிவமுள்ளவனாய் எழுந்து வெளிப்பட்டான். அங்கேயிருந்த அந்தப் பிராமணனை வணங்கித் தான் முன்செய்த பாவமெல்லாம் நீங்கத்தோத்திரம் செய்தான். அப்பால் அவ்வேதியன் அவனுக்குப் புன்னைக்காவின் விசேடத்தையும் தாமரைப் பொய்கையின் மேன்மையையும் விரிவாகச்சொன்னான். பிறகு அந்த அரக்கன், அந்த வேதியனையே குருவாகக்கொண்டுவணங்கி ஊர் பெயர் முதலானவைகளைக்கேட்க அவனும் “ தன்னுடையஊர் சோரையென்றும் பெயர் தருமசாமியென்றும் பிராமணகுலமென்றும் சொல்லி அந்தத் தலத்தின் விசேடங்களையும் உரைத்து நீ இங்கே வந்ததின் காரணத்தை எமக்குச்சொல் ” என அரக்கன் சொல்லலாயினான்.

ஐயனே! “நான் வனத்தில் வாழும் மிருகங்களுக்குந் தாழ்மையானவன். மிகவும் கொடிய பாவி. உன்னுடைய தெரிசனத்தினால் பரிசுத்தனானேன். தயவு செய்து இந்நகரி

லுள்ள விசேடமெல்லாம் சொல்லியருள வேண்டுகிறேன் என வேதியன் சொல்லலானான்.

இந்நகருக்குள்ள விசேடமெல்லாம் சொல்வது முடியாத காரியம். இந்தப் புன்னைவனத்திற்கும் கைலாயத்திற்கும் வித்தியாசமே இல்லை. இங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கியவர்கள் கங்கையின் நீராடிய பலனை அடைவார்கள். இங்குள்ளப் புன்னைவனேசரைப்பணிந்தவர் பாவங்களெல்லாம் தீரப்பெறுவர். அப்படியே நீயும் பரிசுத்தனாகி விட்டனை. இனி இந்தக் களந்தை நகரில் சிலகாலமாவது நீ வாசஞ் செய்யவேண்டு" மென்று சொல்ல அவனும் அவ்வாறே செய்து புன்னைவனநாதரை வணங்கி அருள்பெற்று அந்தத் தருமசாமியையும் கும்பிட்டுப் புகழ்ந்தான். அந்தத் தருமசாமியும் தனது தெரிசனப்பயனில் கொஞ்சம் அவனுக்குக் கொடுத்தான். முடிவில் அந்த அரக்கன் சகல பாவமுந் தீர்ந்து சிவகதி சேர்தலானான்.

---

# வேடன் கதிபெற்ற சருக்கம்.

---

சனங்கம் என்னும் ஒரு வனத்தில் வேடர்களின் கூட்டமொன்றிருந்தது. இந்தக் கூட்டத்தார் காட்டிலுள்ள மிருகங்களையெல்லாம் கொன்று தின்னப்பட்டவர். கொடுமையான சொற்களைப் பேசப்பட்டவர். மிருகத்தின் குணம் பொருந்தியவர். வழிப்பறி முதலான பாவத்தொழில்களையே செய்துகொண்டு வந்த மகா பாவிகள். இவர்களில் சனங்கன் என்னும்பெயருடையவன் ஒருவன். இவன்

கொலை முதலான பெரும் பாவங்கட்கெல்லாம் இருப்பிட மானவன். இவனால் தவசிகளும், பெண்களும், மற்று முள்ள பெரியோர்களும் பட்டபாட்டினுக்கு ஓர் அளவே இல்லை. இவன் ஒரு காலத்தில் தெற்குத் திசையிலுள்ள காட்டில் வந்து வேட்டையாடுகையில் பெரிய பன்றி ஒன்று இவனுடைய அம்புக்குத் தப்பிஓட அதனைக் கொல்லப்பின் தொடர்ந்தான். தொடர்ந்தவன் சோரை என்ற வனத்தில் வந்து சாமள நதிக்கரையில் மிகவும் களைத்துப்போய் விழுந்து விட்டான். அந்த வேளையில் அந்த நதியில் நீரா டிக்கொண்டிருக்கும்அந்தணர்கள் "அரகரசம்போ" என்று சிவநாமத்தைஉச்சரிக்க அந்தச் சிவநாமாவளி இந்தவேடன் காதில் புகுந்தது. புகவே அவன் ஆயாசந்தீர்ந்து அறிவு பெற்றான். அடுத்துள்ள புன்னைவனேசரைப் பற்றிய புண்ணிய புராணங்களையும் அவன் காது குளிரக்கேட் டான். மிகுதியும் பசியுள்ளவனாய் இருந்தபடியால் அவன், பக்கத்திலுள்ள கமல தீர்த்தத்தில் மீன்கள் துள்ளிக்கொ ண்டிருத்தலைக் கண்டு அவைகளில் ஒன்றைப்பிடித்தான். அது துடிதுடித்தலைக்கண்டு இரக்கங்கொண்டு அதனைத் தண்ணீரில் விட்டு விட்டான். பிறகு தேவர்களும் முனி வர்களும் சிவபிரானுடைய சரித்திரங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதனையும் அவன் கேட்டான். கேட்கவே அவன் மஹா புண்ணியவானாகிவிட்டான். அங் குள்ள தேவர்களை வணங்கி மேலான பலனையெல்லாம் அடைந்து விட்டான்.

இவ்வளவில் அவன் காலம் முடிந்து விட்டபடியால் தேவர்களும், சிவகணங்களும், தவசிகளும், அவனை உபசரி த்து விமானத்திலேற்றிச் சுவர்க்கலோகத்திற் கொண்டு போய்ச் சேர்த்து விட்டனர். இது கண்டு எல்லோரும்

ஆச்சரியப்பட்டனர். "மகா பாவியான வேடனும் இங்குள்ள தீர்த்த மூர்த்தி விசேடங்களால் நற்கதி பெற்றான் என்றால் மற்றவர்கள் எப்படிப்பட்ட கதியையடைய மாட்டார்கள்" என்று சொல்லிப் புகழ்ந்து யாவரும் தங்கள் தங்களிடங்களிற் சென்று வாழ்வாராயினர்.

---

# தேவர்கள் பூசித்த சருக்கம்.

---

காசிபர் என்ற ஓர் முனிவர் இருந்தார். அவருக்குப்பல மனைவியர் உண்டு. ஒருத்தியிடத்தில் பல அசுரர்களும், மற்றொருத்தியிடத்திற் பல தேவர்களும் பிறந்தார்கள். இந்த இரண்டு கூட்டத்தார்க்கும் பகை அதிகப்பட்டுப் பல ஆயிர வருடங்கள் மட்டும் சண்டை நடந்தது. முடிவில் தேவர் தோற்றுப்போய் வானுலகத்தைவிட்டுப் பூவுலகத்திற்கு வந்து "சிவபிரான் அருளைப் பெற்றாலன்றி வெற்றிகிடையாது." என்று பிரமதேவன் சொன்னபடி, எல்லாரும் கைலை மலையிற் சென்று தவஞ்செய்யலாயினர். செய்கையில் ஸ்ரீ உமாநாயகர் அவர் முன் தோன்றி "வேண்டியது" என்னையென? அவரை வணங்கித் தேவர்கள் கூறுவார்கள்.

சுவாமி! "முன் காலத்தில் நாங்கள் சிவனோடுவாழ ஆலகால விடத்தைச் சாப்பிட்டீர். திரிபுரத்தை எரித்து எங்களைக் காப்பாற்றினீர். அதுபோல இப்பொழுதும் எங்களுக்கு ஏற்பட்டிருக்கும் அசுரர்கள் விரோதத்தையும் போக்கி இரக்ஷிக்க வேண்டுகிறோம். அவுணர்களால் நாங்கள் படும் பாடு கொஞ்சமல்ல. இந்த ஆபத்திலிருந்து எங்

களைக்காப்பது தங்கள் கடமையேயாகும்" எனத்தோத்திரம் செய்து வணங்க, அவர்களைப் பார்த்துச் சிவபிரான் "ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். நீங்கள் யாவரும் இப்பொழுதே பொதிகை மலையின் தென்புறத்தில் நாம் எழுந்தருளியிருக்கும் களந்தையிற் சென்று தவஞ்செய்யுங்கள்" என்றருளலும், திருமால் முதலான தேவர்கள் யாவரும் கவலை நீங்கியவர்களாய்ப் புன்னைவனத்தை யடைந்து நதியிலும் புஷ்கரணியிலும் நீராடி அந்தப் புன்னைவனக் கடவுளைத் தியானித்துத் துதித்து வணங்கித் தவம் செய்யலாயினர்.

இப்படித் தவம் செய்யும் இவர்கள் முன் களந்தை எம்பெருமான் இடபாரூடராய் எழுந்தருளி "உமது தவத்தைக்கண்டு சந்தோஷமுற்றோம். வேண்டுவது என்ன" என்றருள, தேவர்கள் அவரை வணங்கி அவுணர்களால் தங்களுக்குண்டான துன்பங்களை எடுத்துச்சொன்னார்கள். அதற்குச் சிவபிரான் அவர்களை அருளுடன் கடாக்ஷித்து "நீங்கள் அசுரருடன் போர் தொடங்குங்கள். நாம் சிவகணங்களுடன் அங்கு வந்து அசுரரை வென்று வெற்றி மாலையை உங்களையே அணியும்படிச் செய்கிறோம்" என்று அங்குள்ள தீர்த்தம் மூர்த்தி தலம் இவைகளின் விசேடங்களையெல்லாம் எடுத்து விரித்தருளினர்.

அப்பால் அந்த தேவர்கள் யாவரும் அசுரருடன் போர்செய்ய, கடவுள் தமது கணங்களுடன் அங்கு வந்து அந்த அவுணர்களைக் கொன்று தேவர்களுக்கு வெற்றியைக்கொடுத்து மறைந்தருளினர். அப்பால்அளவில்லாத களிப்பையுடைய அந்தத் தேவர்கள் யாவரும் இன்னும் மேலான வரம் பெறும் பொருட்டு மீண்டுமந்தப் புன்னை

வனத்தில் வந்து திரிபுரசங்காரமூர்த்தியை அபிடேக அலங்கார நைவேத்யாதிகளால் உபசரித்துப் புகழ்ந்து வணங்குகையில் உமையொருபாகப்பெருமான் வெளிப்பட்டு "வேண்டுவது யாது" என்றருளத் தேவர்கள் அவரை வணங்கி சுவாமி! "நாங்கள் கண்டு களிக்க இத்தலத்தில் நடனஞ் செய்தருள வேண்டும்" எனக் கடவுளும் அவ்வாறே செய்வோமென்றனர். பிறகு தேவர்கள், அப்பரமனைத் "தாங்கள் சொன்னபடித் தவறாமல் எங்களுக்குப் போர் முகத்தில் உதவிசெய்தமையால் சத்யவாகீசர் என்ற பெயர் தங்களுக்கு வழங்கவேண்டும் இத்தலத்திற்கும் தீர்த்தத்திற்கும் சத்தியநகரம், சத்தியதீர்த்தம் எனவும் அபிதானங்கள் ஏற்படவேண்டும்" என்றுகேட்டுக்கொள்ளச்சிவபெருமானும் அப்படியே அவ்வரங்களையெல்லாம் கொடுத்தருளி இலிங்கத்துள் மறைந்தருளினர். தேவர்களும் கற்பகக்காவே போன்ற அந்தப்புன்னைக்காவின் நிழலின்மேலேயே வசித்து வந்தார்கள்.

## நடம் புரி சருக்கம்.

முன் திரிபுரத்து அசுரர்கள் நடத்தி வந்த சிவபூசை செய்யுங் காரியத்தைக் கெடுத்து அவர்கள் எல்லோரும் நாசமாவதற்குக் காரணமாயிருந்த பாவத்தினால் திருமால், பிரமன், நாரதர் ஆகிய இம்மூவரும் கண்ணொளியிழந்து குருடரானார்கள். பிறகு மீண்டும் அவர்கள் கண்களைப் பெற்றுக் கொள்ள நினைந்து கைலாயத்திற் சென்று சிவபெருமானைப்பற்றித் தவம் செய்து பூசையும் செய்தார்கள். செய்கையில் சிவபிரான் அவர் முன் தோன்றி அவர்களுக்குக் கண்களைக் கொடுத்ததுமல்லாமல் " வேறு வேண்டிய

த்தையும் கேளுங்கள்" என்றருள அவர்கள் "தமது திரு நடனச் சேவையை அடியேங்களுக்கு அருளல் வேண்டு"மென ப்பிரார்த்தித்தனர்; அதற்குச்சிவபெருமான் அருளலாயினர்.

"தென்திசையில் தக்கணகைலாயமென்று சொல்லப்படுகிற வைரவு நகரத்தில் களந்தை யென்றோர் க்ஷேத்திரமிருக்கின்றது. அது கைலைக்குச் சமானமானது. அங்குள்ள கோயிலில் எமது திருநடனத்தைக் கண்டு களிக்க வேண்டித்தேவர்கள் அங்கேயேதவம்செய்துகொண்டிருக்கிறார்கள். என்றுரைத்து நீங்களும் அத்தேவருடன் அந்த முத்தியம்பலத்திற் சென்று மார்கழி மாதம் திருவாதிரை நாளில் எமது நடனதரிசனத்தைச் சேவிப்பீர்களாக" என்றருள, அவர்களும் அவ்வாறே அந்த அம்பலத்தில் வந்து சேர்ந்தனர்.

அப்பொழுது ஸ்ரீநடராஜப்பெருமான், பாணுசுரன் மத்தளம் முழக்க, பானுகம்பன் சங்கத்துவானம் செய்ய, பிங்களன், நந்திதேவர், முதலான சிவகணங்களெல்லாம் சூழ்ந்து நிற்கத் தேவர்கள் யாவரும் குவித்த கையைத் தலையின்மேல் வைத்து பக்தியில் மிகுந்து விளங்க, சனத்குமாரன் முதலான முனிவர்கள் வாழ்த்தத் திருமால், பிரமன், நாரதன் ஆகிய இவர்கள் நேரே நின்று தெரிசனம் செய்ய, உலகமெல்லாம் உய்யும் பொருட்டு எமது சிவகாமி நாயகர் தமது தாமரை மலரை யொத்த ஒரு திருவடியைத் தூக்கிக் களந்தை யம்பலத்தில் திருக்கூத்து ஆடியருளினர்.

அந்த நடன தெரிசனத்தை அனுபவித்த தேவர்கள் முதலான யாவரும் அந்த நடராஜப் பெருமானை பற்பல விதமாகத் தோத்திரம்செய்து வணங்க, அக்கடவுள்

அவரை நோக்கி உமக்கு வேண்டுவது யாதென்று கேட்க அவர்கள் "பெருமானே! இந்த நடன தெரிசனத்தை நாங்கள் எப்பொழுதுமே தெரிசனம் செய்துகொண்டிருக்க வேண்டும். அருள்க" எனலும், அவ்வாறே சிவபெருமானும் அருளிச் செய்தனர். அப்பால் அத்தேவர்கள் யாவரும் தனித்தனி இலிங்கப்பிரதிட்டைசெய்து வணங்கித் தங்கள் தங்கள் இடங்களிற் சென்றனர். இந்தத்தேவர்களின் நிமித்தம் மனிதர்களுக்கும் தெரிசனம் கிடைக்கப் பெற்றது விசேஷமல்லவா.

ஆதிகாலத்தில் குலசேகரன் என்ற ஓர் பாண்டிய அரசன் இந்தக் களந்தைமா நகரத்தை ராஜதானியாகக் கொண்டு அரசாண்டு வந்தான். இவன் சிவபூசை செய்பவன். சிவகைங்கரியங்களிலும் ஈடுபடுபவன். இவன் ஒரு காலத்தில் காசிக்குச்சென்று கங்கையில் நீராடி வருகையில் அனேக சிவதலங்களைத் தெரிசனம் செய்து சிதம்பரத்திற் கனகசபையிற்சென்று ஸ்ரீநடராஜப்பெருமானைத் தெரிசித்து சுவாமி! "அடியேன் எப்பவும் உமது திருநடனச் சேவையை விட்டு நீங்காதபடி அருள வேண்டுகின்றேன்" எனப் பிரார்த்திக்க அதற்கு அக்கடவுள் அசரீரியாய் அரசனே! "உன்னுடைய ராஜதானியாகிய களந்தையம்பலத்தில் அரி பிரமாதி தேவர்கள் வேண்டிக்கொண்டபடி நாம் நடனம் செய்து, வேண்டும் வரங்களை அவர்களுக் களித்தோம். ஆதலால் நீயும் அங்கே சென்று நமது நடனதெரிசனத்தைப் பெறுவாயாக. உன்னால் அந்தத் தலத்தின் பெருமை உலகமெலாம் பரவப்போகின்றது" என்றருள, அவனும் அந்தச் சிதம்பரேசப் பெருமானை வணங்கி ஊரை நோக்கிப் புறப்பட்டான். வரும் வழியில் சீகாழிமுதல் பொதிகைமலை வரையிலுள்ள சிவாலயங்களையெல்லாம்

வணங்கிக் கடைசியில் திருக்களந்தைமாநகரத்திற்கு வந்து சேர்ந்தான். அங்கேயுள்ள சபையில் ஸ்ரீ நடராஜப் பெருமானை வணங்கிச் செங்கோலோச்சி வரலானான்.

வருநாளில் வியாசமுனிவரால்பூசிக்கப்பட்ட நினைத்ததை முடித்த விநாயகருக்கும், புன்னைக்காவிலுள்ள சிவ பெருமானுக்கும் கோவில்கள் கட்டிவைத்தான். ஸ்ரீவிசுவநாதர் விசாலாக்ஷி அம்பாளையும் தன்பெயர் விளங்கப் பிரதிட்டை செய்து வணங்கினான். குலசை யென்னும் நகரத்தை யுண்டாக்கிச் சிவலிங்கத்தைத் தாபித்து அப்பெருமான் கனவில் அருளியபடி அங்கேயே ஓர் கோவிலையுங்கட்டி, குலசைநாயகனென்ற சுவாமிக்குத் திருப்பெயரும் சாத்தினான். சாமள நதிக்கரையிலுள்ள ஆறு தலங்களையும் வணங்கி பூசைக்கு வேண்டியவை எல்லாங் கொடுத்து ஸ்வாமி சோமநாதர், சொக்கநாதரையும் வந்தனைசெய்து சந்தோஷத்துடன் களந்தைநகரிலே வசித்து வந்தான். சில காலஞ்செல்ல அந்த வேந்தன் தான், நாள் தோறும் காலந் தவறாமல் தெரிசனஞ்செய்துகொண்ட நடராஜப்பெருமான் கருணையால் சாயுஜ்ய பதவி யடைந்தான்.

---

# மகப்பேறு பெற்ற சருக்கம்.

---

காவிரிநதி ஓடுகின்ற சோளதேசத்தில் காசிபகோத்திரத்தில் தருமசாமி என்றோர் பிராமணனிருந்தான். இவன் வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள் முதலிய பல சாத்திரங்களையும் நன்றாய்க் கற்றவன், யாகங்கள் செய்தவன், பரிசுத்த முள்ளவன், பலரையும் நேசிப்பவன், இவனுக்கு ஓர் மகனுண்டு. அவன் பெயர் சங்கரசாமி. இவன்

மிருந்த செல்வமுள்ளவனாய் வாழ்ந்து வந்தான். வெகு காலமாய் இவனுக்குப் பிள்ளை பிறக்கவில்லை. இந்தக்குறையைத் தீர்த்துக்கொள்ள சிவபிரானை வழிபட்டான். அயனவிரதம் அனுட்டித்தான். குல தெய்வங்களை வேண்டினான். பல தீர்த்தங்களிலும் நீராடிப் பல தானதர்மங்களையும் யாகங்களையும் செய்து முடித்தான். இப்படியிருக்கையில் ஓர் பெரியவர் அங்கு வந்து சங்கரசாமியை நோக்கி " நீ இப்பொழுது காசிக்குப் போய் கங்கையில் நீராடி சிவலிங்கப் பிரதிட்டைசெய்து அநேக தானதர்மங்களும் செய்யவேண்டும். அப்பால் திரிவேணிகட்டத்தில் ஸ்நானம்செய்து கங்காசலத்தைக் கொணர்ந்து சிவபெருமானுக்கு அபிடேகம் செய்விக்கவேண்டும். இப்படியெல்லாம் செய்தால் உனக்குப் புத்திரன் பிறப்பான் " என்று உரைத்தனர்.

இவையெல்லாங்கேட்ட சங்கரசாமியும் அந்த முதியோன் சொன்னபடியே ஏராளமான பொருளுடன்பந்துக்களையும் வேலையாட்களையும் உடன் அழைத்துக்கொண்டு பல காடுகள் நாடுகள்நகரங்களையும் கடந்துகாசியிற்சென்று கங்கையின் நீராடி அங்கோர் இலிங்கத்தையும் பிரதிட்டை செய்து பூசித்து வணங்கினான். அப்பொழுது சிவபிரான் அந்த இலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு ஓ பரிசுத்தனான வேதியனே! " உன் பூசையால் நாம்மிகவும் சந்தோஷமடைந்தோம். இனி நீ சிலகாலம் இங்கு இருந்துவிட்டு இந்தப் பூமியில் பொதிகைமலையின் தெற்கேயுள்ளதாய் தலம், தீர்த்தம், மூர்த்தி விசேஷங்களிற் சிறந்த தாய்விளங்கும் புன்னைக்காக்ஷேத்திரத்தில் சென்று பச்சை நதியில் நீராடி அடியார்களை உபசரித்து அங்குள்ள சிவபிரானையும் வணங்குவையாயின் உனக்கு மகப்பேறு உண்டாகும் "

என்றருள, அந்தணனும் அக்கடவுளை வணங்கிச் சிலநாள் அங்குத்தங்கித் தெக்கணம் நோக்கிப் பிரயாணமானான்.

இவ்வாறு கடவுள் அருளியபடி தெற்கே பிரயாணப்பட்ட சங்கரசாமி வழியிலுள்ள தேவாலயங்களிலும் தெரிசனம் செய்துகொண்டேவந்து பச்சைமா நதியில் நீராடிக் களந்தையில்வந்து கமலவாவியில் ஸ்நானம்செய்து விநயகரை வணங்கி நிற்கையில், அங்கே எழுந்தருளியிருக்கிற அகத்திய முனிவர் அவனைக் கண்டு "நீ இங்கே வந்ததின் காரணம் என்னவென்று கேட்க அவனும் "நடந்ததெல்லாம் சொல்லி சிவபிரானின் உத்தரவின்படியே இங்கு வந்தேன்" என்றனன். அப்பொழுது அகத்தியர் அவனைப் பார்த்துச் சங்கரசாமி கேள்! "இந்தத் தலத்தின் மகிமையை அளவிட முடியாது. சித்தி, சுத்தி, ஞானம், சுகம், செல்வம், புண்ணியம், கீர்த்தி, புத்திரப்பேறு, மோக்கம் முதலிய சகல பாக்கியங்களும் இந்த இடத்தின் விசேடத்தால் அடைந்து கொள்ளலாகும். ஆதலால் நீ இங்குள்ள தீர்த்தத்தில் நீராடி ஸ்ரீ வைரவநாதப்பெருமானைப் பூசித்து வணங்குவாயேயானால் உனக்குப்புத்திரன் பிறப்பான். நீ கொண்டுவந்த கங்கா சலத்தை அபிடேகஞ்செய்தால் நினைத்ததை யெல்லாம் அடைந்து கொள்வாய். நீ இங்கு உன் மனைவியுடன் வந்தது உனது புண்ணிய விசேடமேயாகும். இனி நீ இங்கேயே வசிப்பாயாக" என்றருளி மறைந்தனர்.

அப்பால் அந்தச் சங்கரசாமி, அம்முனிவர் கூறியபடியே வைரவலிங்கத்தைப் பூசித்து வணங்க அவனுக்கோர் மகன் பிறந்தான். பிறகு அவன் களிப்புடன் அந்தக் களந்தையிலேயே வசித்து வரலாயினான். முடிவில் நற்கதியையும் அடைந்தான்.

# அகத்தியச் சருக்கம்.

---

பண்டைக்காலத்தில் உமாதேவியைச்சிவபெருமான் இமயமலையில் கல்யாணம் செய்துகொண்ட காலத்தில் அத்திருமணக்கோலத்தைத் தெரிசிக்கும்பொருட்டு இப் பூமியிலுள்ளார் யாவரும் அந்த மலையில்வந்து குவிந்துவிட்டனர். அதனால் அப்பாரம் தாங்காது வடதிசை தாழத் தென்திசை உயர்ந்து விட்டது. இது கண்ட தேவர்கள் சிவபிரானிடம் முறையிட அவர் அவர்களுக்கு அபயங் கொடுத்து அகத்திய முனிவரை அருகிலழைத்து ஓ முனிவரனே! “ நீ எனக்குச் சமானமானவன். உனது மனையாளோ எமது உமாதேவியை ஒப்பாவள். ஆதலால் நீங்களிருவரும் இப்பூமி சமமாகும் பொருட்டுத் தெற்கேயுள்ள பொதிகையிற் சென்று வசிப்பீராக, எமது திருமணக்காட்சியை அந்தப் பொதிகையிலே தருவோம் செல்லுங்கள்” என்றருள, அவர்களும் பிரானிடத்தில் விடைகொண்டு வரும் வழியில் காவிரி நதியை உண்டாக்கிப் பல சிவதலங்களைச் சேவித்துப் பொதிகையில் வந்து சேர்ந்தனர். பூமியும் சமமாகி விட்டது. அப்பால் சிவபிரானும் முன்கூறிய படி அவர்களுக்குத் திருக்கலியாணக்கோலத்தைத் தெரிசிப்பித்தனர். அப்பால் அம்முனிவர் தமது மனைவியோடு பொதிகையிலேயே வாசஞ்செய்யலாயினர்.

இப்படி இவர் இருக்கும்போது சாமளன் என்னும் அரசன் அந்த அகத்தியரை வணங்கித் “ தாங்கள் தெற்கிலுள்ள மலைக்கு எழுந்தருளல் வேண்டுமென்றும், சாமளம் என்ற ஓர் நதியை அங்கு உற்பத்தி செய்தருள வேண்டு ” மெனவும் கேட்டுக்கொள்ள அதற்குச்சம்மதித்த

அந்தத் தமிழ் முனிவனும் கோமதிநாயகரைத் தெரிசிக்க ஆசையுள்ளவராய் அந்தக் களந்தைமா நகரத்திற் சென்று நீராடி விநாயகரை வணங்கி ஸ்ரீகளந்தைப் பிரானையும் ஸ்ரீ நடராஜ மூர்த்தியையும், சிவகாமி அம்பாளையும் சேவித்து நிற்கையில் சிவபிரான் இடபாரூடராய் அவர்களுக்குத்தெரிசனங்கொடுத்து அவர்விரும்பியவரங்களையும் தந்தருளினர்.

அப்பால் அங்குக்கூடியிருந்த முனிவர்கள், சித்தர்கள் யாவரும் சிவபெருமான் அருள்பெற்ற அகத்தியமுனிவரை வணங்கி ஓ மஹாமுனிவரே! "உலகத்தில் உருத்திராக்கமணி வந்த வரலாறும், அதையணிபவர் அடையும் பயனும், விபூதியின் வரலாறும், அதையணிபவர் பயனும், மந்திரத்தின்பயனும், சிவபெருமான் புராணங்களைப்படிப்பவர்பயனும், சிவபூசை செய்யப்பட்டவர் அடையும் நன்மைகளும் ஆகிய இவையெல்லாம் எங்களுக்கு விரிவாய்ச் சொல்லவேண்டு" மெனக் கேட்கக் குறுமுனி கூறுவார்.

"உருத்திராக்கம் சிவபெருமானுடைய கண்களிலிருந்து தோன்றியது. அது ஒருமுகம் முதல் பதின்மூன்று முகம்வரையுள்ளது. அந்த மணியைவைத்து செபம் செய்யப்பட்டவர்பயன் மூன்றுவகைப்படும். பொதுவாய் இதையணிபவர் பாதகங்களும், நோய்களும்நீங்கப்பெற்றுப் பலவகைத்தர்மம் செய்தபயன்களையும், அரசாளும் பதவியையும் அடைந்து மோக்கத்தையுமடைவார்கள். உலகமுடிவில் சிவபிரான் நெற்றிக்கண்ணால் எரித்த காலத்திலுண்டாகிய விபூதியை யணிந்தவருடைய உள்ளத்தில் சிவபெருமான் எக்காலமும் குடிபுகுந்து உறைவர். இந்தவிபூதியையணிந்தவரே நமக்குச்சிவபிரான். அவரையன்றி நமக்கு வேறு ஒரு கடவுளில்லை. விரியாய்ப்பேசுங்காலத்து விபூதி

உருத்திராக்கங்களை யணிந்து பஞ்சாக்கரத்தை ஜெபிக்கும் ஒருவர் சீவன் முத்தராவர் என்பதில் ஐயமில்லை. மேலும் சிவபிரான் நாமங்களை உயர்ந்த சப்தத்துடன் உச்சரிக்கப் பட்டவர் அடையும் பயனுக்கு ஓர் அளவேயில்லை. சிவ பூசை செய்யப்பட்டவர், அடியார்களை உபசரிக்கப்பட்டவர், தவசிகளுக்கு அன்னம் கொடுக்கப்பட்டவர், ஓமம் செய்யப் பட்டவர், சிவலிங்கப்பிரதிட்டை செய்யப்பட்டவர் தலங் களிற் சென்று வலம் வந்து வணங்கப்பட்டவர், திருப்பணி செய்யப்பட்டவர், நாயன்மார் சரித்திரங்களையும் புராணங் களையும் படனம் செய்யப்பட்டவர், சிவனடியாரே சிவ பெருமானெனத்தெரிசித்து வணங்கப்பட்டவர் ஆகிய இவ ர்களெல்லாம் சாயுச்சியம்என்னும் பதவியில் நிலைத்திருப்பா ர்கள்,'' என்று விரிவாகஉரைத்த அகத்தியமுனிவர், அத்த லத்திலுள்ள தீர்த்தத்தின் நீராடி மூர்த்தியையும் வணங்கி பொதிகைமலைக்கண் எழுந்தருளினர்.

---

## வணிகச் சருக்கம்.

---

முன்னொரு காலத்தில் பிரமனின் முழங்காலி லிருந்து பிறந்தவராகச்சொல்லப்படும் வணிகரில், தத்தன் என்பவன் குமாரனை சோமதத்தன் என்னும் பெயருள்ள பெரும்பொருள்படைத்த ஓர் வைசியன் இருந்தான். இவன் மிகவும் கொடியவனாதலால் இவனிடத்திலுள்ள செல்வங்களெல்லாம் உள்ளன போல இல்லாதனவாய்ப் போய்விட்டன. போய்விடவே, ஒன்றுமில்லாத அவன் பொருள்தேடும் முயற்சியில் முனைந்து ஆணியும், தராசும், படியும், பையும் உடையவனாய் வெளிப்

பட்டான். இலாபம் கிடைக்குமானால் பிறருக்குக்கேடு செய்வான். எவரையும் வஞ்சிப்பான், பொய் சொல்வான், ஒன்றுக்குப் பத்து வீதம் லாபங்கொள்வான், நன்றி மறப்பான், பிறருக்குத் துன்பம் செய்வான், துரோகமும் செய்வான், நல்லவனைப் போல் நடிப்பான், நயவஞ்சகமும் செய்வான், கொள்ளையும் புரிவான். இப்படி இவனுகிவிட்டபடியால் மிகுதியுந்தரித்திரப்பட்டவனாய் நாடு நகரங்களில் எல்லாம் பிச்சை யெடுத்து உண்டு உயிர் வாழ்ந்தான். ஒரு நாளிவன், காடு மலைகளிலெல்லாம் சுற்றித்திரிந்து பசியினால் களைத்துப் புன்னைக்காவில் வந்து சேர்ந்தான். அங்கோர் கொன்றைமரத்தில் ஒரு தேன் கூடு இருப்பதைக் கண்டு அதனை எடுத்துப் புசிக்கவேண்டி அந்த மரத்தில் ஏறுகையில் அதிலுள்ள பூக்களெல்லாம் கீழே உதிர்ந்தன. "இப்புஷ்பங்களெல்லாம் சிவபிரானுக்கே" என்று சொல்லிக் கொண்டு ஏறுகையில் கால் வழுக்கிக் கீழே விழுந்து இறந்து போனான். இப்படி யிறந்தவனை இயமதூதர்கள் கொண்டு போய்ப் பலவிதமாய் நரகத்திலிட்டு வருத்துகையில் சிவகணங்கள் அங்கு வந்து இயமதூதர்களை விலக்கி அவன் செய்த புஷ்பத்தொண்டினை விளங்கச் சொல்லி விமானத்தில் அந்தச் சோமதத்தனை ஏற்றிச்சிவலோகத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

மகாபாவியான ஓர் வணிகன் வாய்ச் சொல்லினாலே இப்படிப்பட்ட பதவியை அடைந்தானென்றால் முறைப்படி கடவுளைப் பூசித்தவர் அடைந்து கொள்ளும் பயனை எவராலே தான் எடுத்துச் சொல்ல முடியும்.

---

# தசாவதாரச் சருக்கம்.

முன் ஓர்காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த சண்டையில் தேவர்கள் ஜெயம் பெற்றார்கள். அசுரரோ தோற்றோடிச் சுக்கிரனின் மனைவியிடத்தில் அடைக்கலம் புகுந்தனர். இப்படி அடைக்கலம் அடைந்த பலத்தால் அசுரர்கள் தேவர்களை அடித்து ஓட்டி விட்டார்கள். இவ்வாறு ஓடின தேவர்கள் திருமாலை யடைந்து, தங்கள் வருத்தத்தைத் தெரிவிக்க, அவர் சுக்கிரன் மனைவியிடம் சென்று "நீ அசுரர்களுக்கு அடைக்கலஇடமாயிருத்தலை விட்டுவிடவேண்டும்" என்றுசொல்ல, அதற்குஅவள் சம்மதிக்கவில்லை. உடனே மாயவன் கோபங்கொண்டு சக்கிராயுதத்தால் அவளைக்கொன்று விட்டனன். இது கண்ட சுக்கிரன் மிகச் சினங்கொண்டு அந்தப்பதுமநாபனைப் பார்த்து "நீ ஸ்திரீ ஹத்தி செய்தபடியால் பத்துப் பிறப்புக்கள் எடுக்கக்கடவை. அதில் ஒரு பிறப்பில் உனது பார்யையாகிய சீதையை ஓர் அரக்கன் எடுத்துக் கொண்டு போகக்கடவன்" எனச்சபித்தனன். இப்படிச் சாபங் கொடுத்ததைக் கேட்டதும், கடல்வண்ணன் பெரிதும் வருந்தி அச்சுக்கிரனை நயந்து வேண்டி "இட்ட சாபத்தைத் தீர்த்துக்கொள்ளும் மார்க்கத்தைச் சொல்ல வேண்டு" மெனக்கேட்க சுக்கிரன் அவனைப் பார்த்து "நீ கைலையிற் சென்று ஸ்ரீநாரிபாகனைப்பற்றித் தவம் செய்து பூசித்து வணங்குதலே உனது சாபம் நீங்குதற்குரிய வழியாகும்" என அவனும் அவ்வாறே கைலையில் தவஞ்செய்யச் சென்றனன். சுக்கிரனும் தனது தவபலத்தினால் மனைவியை உயிருண்டாகும்படிச் செய்து விட்டனன்.

கைலேயிற் சென்ற மாயவனும் தவம் செய்ய, அவன் முன் கைலாயபதி எழுந்தருளி, உன் தவத்தைக்கண்டு சந்தோஷமடைந்தோம். "நீ செய்த பெண் கொலைப்பாதகம் தீரவேண்டுமானால் இப்பொழுதே பொதிகை மலையின் சார்பிலிருக்கின்ற புன்னைக்காவில் எழுந்தருளியிருக்கும் மகா இலிங்கத்தை வணங்கி அங்கேதானே இருக்கக் கடவாய். உன் பாதகம் தீர்ந்து விடும். பிரகுமுனிவர் இட்டசாபப் படி பத்துவிதப்பிறப்புக்களும் பிறந்தே தீரவேண்டும். அப் பொழுது யாம் வேண்டும் வரங்களைக் கொடுப்போம். அத் தலம் சிவலோகத்திற்குச் சமானமாகும். அங்குள்ள தீர்த் தங்களோமேலானவை. மூர்த்தியைப் பிரதோஷவேளை, கார்த்திகைச் சோமவாரம் முதலான காலங்களில் அபிஷேகம் நைவேத்யம் முதலானவைகளால் உபசரித்தால் மேலான சிவபதம் கிடைப்பதாகும் என்றருளினர்." இவை யெல்லாம் கேட்ட விஷ்ணு, இனி நான் உய்ந்தேனென்று துணிந்து களந்தைமாநகரில் வந்து சாமள நதியிலும் தாமரைத்தடாகத்திலும் நீராடி கோமதியோர் பாகத்தவராகிய கொன்றைவேணியனை அருச்சித்து வணங்கிப் பலவாறு புகழ்ந்துநிற்கையில், சிவபிரான் அந்த மஹா இலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு அந்தத் திருமகள் நாயகனை நோக்கி "உன் தவத்தினுக்கு உவந்தோம் வேண்டுவது என்னை" என, திருமால் "பிரகுமுனிவரால் கொடுக்கப்பட்டசாபம் தீரவேண்டும்" என்றான். கண்ணுதற்பெருமான், "உன் சாபம்தீரப்பெற்றது. இனி நீ யெடுக்கும்பிறப்புக்களோடும் உலகத்தைக் காப்பதான காரியங்களை முடித்துக்கொண்டு இங்கு வந்து என்னைப் பூசிக்கக்கடவாய்" என்றருள, அவனும் அப்படியே நடந்துவரலானான். முடிவில் அந்த மாயோனது அகந்தையையும் போக்கியருளினர். அப்பால் அந்தக் கடல் வண்ணன் அப்பிரானை வணங்கி விட்டு வைகுந்தஞ் சார்ந்தான்.

அங்கு வந்திருந்த தேவர்கள் சித்தர்கள் முதலாயி ேேனார் தனித்தனி இலிங்கங்களைப் பிரதிட்டைசெய்து வண ங்கச் சிவபிரான் இடபாரூடராய் அவருக்குமுன் எழுந் தருளி அவர்களை நோக்கி " கைலைமாமலையே இதோ தெரி கின்ற வைரவமலை, கற்பகச்சோலையே இந்தப் புன்னைக்கா வாகும் " என்றருள, அவர்கள் அவ்விடத்திலேயே நினைத் ததையெல்லாம் அடைந்துகொள்ளும் ஆசையுடையவராய் தவஞ்செய்து வரலாயினர்.

---

# பாண்டியச் சருக்கம்.

---

ஆதியில் மதுரையை அரசு செய்து வந்த குலசே கரபாண்டியன் வம்சத்தில் வல்லமை பொருந்திய சண்பக மாறன் என்னும் பாண்டியன் இருந்தான். அவன் மகன் குலபூஷணன். இவன் பேரன் சுந்தரபாண்டியன். இவன் பேரன்குலசேகரபாண்டியன். இவன்மதுரையில்செங்கோல் செலுத்துகையில் முன்னாலே சொன்ன குலசேகரபாண்டி யன் அவ்விடத்தில் ஓர் பட்டணத்தை யுண்டாக்கி சிவலிங் கத்தைப் பிரதிட்டைசெய்து அதற்குத் தன் பெயரையே சாத்தி அதாவது 'குலசேகரமுடையார்'எனப் பெயரிட்டு திருப்பணிமுதலாயினசெய்து பல செல்வங்களையும் அந்தக் கோயிலுக்குக் கொடுத்துப் போற்றிவந்தான். வருகையில் அவன் முன் ஸ்ரீ சந்திரசேகரபெருமான் வெளிப்பட்டு, " உனக்கு என்னவேண்டு " மெனக்கேட்க, அதற்கு அவன்

"என்னுடைய பெயரே உமக்கு மிருக்கவேண்டு" மென்று கேட்டுக் கொண்டான். கடவுளும் "அவ்வாறேயாகுக" வென்று அருளினார். சில நாளில் அப்பாண்டியனும் சிவகதி சார்ந்தான். அவன் மகனாகிய கருணாகரனும் அந்த ஆலயத்திற்கு அனேகம் திருப்பணிகள் செய்தான். அவன் மகன் நதிக்கரையோரத்தில் ஓர் ஆலயத்தைக்கட்டுவித்தான்.

சவுந்திரபாண்டியன், சந்ததியை விரும்பிக்களந்தை நகரின் வடபால் ஓர் ஆலயத்தையமைத்து பூசைகளுக்கு வேண்டும் ஏற்பாடுகளைச் செய்தான். அந்த அரசனுடைய மகள் புத்தி மயங்கினவளாயிருக்க அவளுடைய புத்தி தெளிய வேண்டியும் தன்னுடைய பெயர் விளங்க வேண்டியும் கோவில் கட்டி சிவஇலிங்கத்தைப் பிரதிட்டை செய்து சுந்தரேசுவரர் என நாமஞ்சாத்தி அருள்பெற்றான். தன் மகளைப்பற்றியிருந்த அத்திநோய்நீங்கிவிட்டது. அதனால் சந்தோஷமடைந்த அந்தப் பாண்டியன் தனது பட்டத்து யானையை அலங்கரித்து அதன் மேல் கோவிலர்ச்சகரையேற்றி அந்தப் பட்டணத்தைச் சூழ்ந்து பவனிநடத்தினான். இப்படிக் கரிவலம்வந்த அந்தக் களந்தை நகரத்தை அந்தக் கடவுளுக்கே சமர்ப்பித்தான். தன்னுடைய மகள் புத்தி மேன்மேலும் வளருதலைக் கண்டு அந்தக் கோமதியம்பிகையின் திருமேனிகுளிரும் வண்ணம் அபிஷேகம் செய்யக்குளமுமமைத்துச் சோலைகளும், நந்தவனங்களும், விளங்கும்படி செய்தான். சிதம்பரத்திலும், நெல்லையிலும் ஸ்ரீ நடராஜமூர்த்தி செய்து கொடுத்த சிற்பியினால் செய்து கொடுக்கப்பட்ட நடராஜமூர்த்தியின் அழகைக்கண்டு முத்தமிட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டான்.

குலசேகரபாண்டியன் என்பவன் இந்தக் களந்தையிலிருந்து அரசாட்சி செய்து புன்னைவனப் பெருமானு

க்குத் திருப்பணி பல நடத்தித் தன் பெயர் விளங்க ஓரிலி ங்கத்தையும் பிரதிட்டித்துச் சொக்கநாதரையுஞ்சேவித்துக் குலசைநகரை நல்லவண்ணம் வளமுண்டாகும்படிச்செய்து அந்நகரையுஞ் சேர்த்தே ஆண்டு கொண்டு வந்தான். முன்பு சவுந்தரபாண்டியனால் அமைக்கப்பட்டகரிவலம்வந்த நகரத்துக்கோயிலின் திருப்பணிகளை நன்றாய்க்காப்பாற்றிப் புதிதாய்த் திருப்பணிகளும் செய்து ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் ஆலயத்திலும்சிலதிருப்பணிகள் செய்திருக்கின்றனன். அப்பால் அவன் சோமநாயகர் முதலான பச்சையாற்றின் கரையிலுள்ள தலங்களையெல்லாம் வணங்கிப்போற்றினன்.

சிங்கன் என்னும் அரசன், கந்தர்ப்ப மலையில் இரேணுமுனிவன் வணங்கிய ஸ்ரீ கைலை நாயகரைப் பக்தியுடன் பரவி திருப்பணிகளும் செய்து வரங்களும் பெற்றுளான்.

குலசேகரபாண்டியனின் குமாரன் சிவலமாறன். இவன் மகன் வரகுணபாண்டியன். இவன் மகன் விக்கிரமபாண்டியன். இவன் மகன் பெருமை பொருந்திய சண்பகபாண்டியன். இவனுடைய பேரன் களந்தையில் வாழும் சிவபக்தனான வீரமார்த்தாண்டனென்பவன். களந்தையிலுள்ள ஸ்ரீ வைரவநாதரிடத்திற் பக்திமிகுந்து திருப்பணிகள் பலவும் செய்தான். சோரை நகரில் எழுந்தருளியிருக்கும் கோமதிநாயகராகிய சத்யவாசகப்பெருமானுக்கு நித்தியநைமித்தியாதி விசேடங்களுக்கு வேண்டும் திரவியங்களைக் கொடுத்தான். வீரவநல்லூர்பூமிநாதரை வணங்கித் திருப்புடைமருதூரில் எழுந்தருளியிருக்கும் கடவுளுக்குத் தகுதியான திருப்பணிகள் செய்து பூசனைநடந்தேறிவருவதற்காகப் பச்சையாற்றங்கரையிலுள்ளப் பல விளை நிலங்களைக் கொடுத்தான். அப்பால் அர்ச்சுனேசுரரை வணங்கி சாமளா நதியினீராடி கோமதி நாயகரைப் போற்றி அழியாத கீர்த்தியைப் பெற்றுக் கொண்டனன்.

# அருச்சனைச் சருக்கம்.

சூதமுனிவன் சொல்ல, இக்கதைகளெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த முனிவர்கள் அச்சூதரை வணங்கி "நாங்கள் அந்தக் களந்தையின் பெருமானைப் புன்னைவனத்திற் சென்று சேவிக்க ஆசையுடையவராயிருக்கிறோம்" என்று சொல்ல சூதரும் 'நானும் சேவிக்க ஆசையுள்ளவனாயிருக்கிறேன்" என்று சொல்லி அவர் அங்கிருந்த முனிவர்கள், தேவர்கள், சித்தர்கள், பக்தர்கள் முதலான யாவரையும் அழைத்துக் கொண்டு அப்புன்னை வனத்தை நோக்கிப் புறப்பட்டனர்.

இங்ஙனம் பிரயாணப்பட்ட அடியார்கள் பல தலங்களிலும் உள்ள சிவாலயங்களைத் தெரிசித்துக் கொண்டு புன்னைக்காவிலுள்ள களந்தைமாநகரையடைந்து அங்குள்ள தீர்த்தத்தில் நீராடி அந்த வைரவமலையின் வளங்களையெல்லாம் கண்ணாரக்கண்டு வியாசமுனிவரால் பூசிக்கப்பட்ட சிவபிரானை வழிபட்டு, கன்னிமூலையிலிருக்கின்ற ஸ்ரீ கற்றவிநாயகரையும், வள்ளிதெய்வநாயகிசமேத ஸ்ரீ சுப்பிரமணியரையும் வணங்கி, ஸ்ரீ விராட்புருஷனுடைய கண்டஸ்தானமான களந்தைமா நகராலயத்தினைச் சூழ்ந்து அங்குள்ள, பொற்றாமரையினீராடி சூதமுனிவரோடு யாவரும் சன்னிதானத்திற் சென்று ஸ்ரீ சத்யவாகீசனை வணங்கித் தோத்திரம் செய்து விசேடமான அபிடேக அலங்காரங்களை முறைப்படி நடத்திப் பூசித்துப் பற்பல விதமாகத் தோத்திரஞ்செய்து போற்றினர். அப்பால் அவர்கள் சபையிலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ நடராஜமூர்த்தியையும் வந்தனைசெய்து பற்பல வரங்களையும் பெற்றுத்தங்கள் தங்கள் இடங்களிற் சென்று சுகமாக வாழ்வாராயினர்.

களந்தைப்புராண வசனச்சுருக்கம் முற்றிற்று.

# களந்தைப் பதிகம்.

---

## நூல்.

1. வளர்திகழ் கங்கையுந் தும்பையுஞ் சூடியமங்கை பங்கர்
கிளர்ந்தெழு மகந்தையா லிருவரும் பொருதுமுன் கீழுமேலும்
அளந்தறியாதவ ரன்பருக் கெளியவ ராலகாலங்
களந்தனிற் புனைந்தவர் களந்தையம் பதியுறை கடவுளாரே.

2. கயிரவந் தாமரை யொடுமணங் கமழ்தரு களந்தையூரில்
வயிரவ மன்னவன் வந்துகண் டடிதொழு மழுவலானை
யுயிரவை யுள்ளுறை யொருவனு மிறைவனை யுள்ளுவார்கள்
செயிரவ மாகிய தீவினை நோய்பவந் தீர்வர்தாமே.

3. தந்திமா மதசலம் பாய்தடஞ் சாரலிற் றடைசெயாமல்
மந்திபா யும்பொழில் மாமலர்த் தாதுகும் வண்களந்தை
யந்திமா மேனியா ரருவுரு வாயினா ரடிபராவிச்
சிந்தியா நின்றவர் பெற்றபே றன்றியோர் செல்வம்யாதே.

4. சேண்டிகழ் கோபுரஞ் செம்பொன்மா மலையெனத் திகழுகின்ற
பாண்டியர் பலர்பயில் களந்தையம் பதியுறை பரமர்பாதந்
தீண்டியர்ச் சனைசெய்வார் தீபதூ பந்தரச் சேவைசெய்வார்
வேண்டிய வரமெலா மெய்துவார் வெவ்வினை மேவிலாரே.

5. அலைபுனற் கலைமக ளாற்றினிலாடியுள் ளஞ்செழுத்தை
நிலைபெற வெண்ணிவெண் ணீறுகண் டிகையணி நேயமிக்கு
மலைமகள் பாகனைக் களந்தையிற் கண்டே வணங்கிவாழ்த்தி
யிலைமலர் தூவுவார் மாலயன் பதவிக ளெய்துவாரே.

6. அரக்கன்முன் சீதையைக் களவுசெய் வனமிஃதாகலாலே
கரக்கரும் பேர்களக் காடெனுங் களந்தையிற் கரவிலாமல்
இரக்கம்வைத் தன்பிலு லேத்திவந் தேற்பவர்க்கிலை யெனுமற்
புரக்கநின் றவரருட் புன்னைவ னேசராம் புனிதனரே.

7. இடர்தவிர் வானவர்க் கருளிய வரத்தினு லெய்தினான
நடநவில் வயிரவ நாதரை யாதிரை நாளிலேகி
யுடல்புள கங்கொளக் களந்தையி லாண்டுதோறும் பணிந்தார்
திடமுறு சென்மநோய் தீர்ந்து சாயுச்சியஞ் சேருவாரே.

8. மறையவ னரக்கனுய் வந்தபா வந்தனை மாற்றிமுன்போல்
உறைவடி வந்தருபுண்யபுட்கரி ணியு லூற்றமூழ்கி
யிறையெனும் வயிரவ நாதரைக் களந்தையி லிறைஞ்சுவார்கள்
குறைதவிர்ந் தின்புறு மன்பராந் தொண்டரிற் கூடுவாரே.

9. தீர்த்தயாத் திரைசெய்வார்க் கிடர்செயுஞ் சனங்களுந்
[தீயவேடன்
கூர்த்தபா தகமெலாந் தீர்த்தசா மளநதி கூடியாடி
யார்த்தபூம் புன்னையார் களந்தையுட் சிவகதையாய்ந் திருந்தால்
பார்த்தபோ தேயவ ரொடு கலந் தின்பறு பவிக்கலாமே.

10. புலியுரி கரியுரி யுரித்து மெய்ப் போர்த்துளார் புன்னை சூழ்
மலிகளக் காட்டிலே வைகுவா ரென்னிலும் வந்து பாடிக்
கலியன் வெங் கொடுமைதீ ரெனுங்கவி வாணரைக்,
[கருணைசெய்து
மெலிவுதீர்ப் பாரவர் வயிரவ நாதராம் விமலனரே.

11. தூயசீர்பன்னிய களந்தைவே ளாளர்தந் தொல்குலத்தில்
ஆய மீனுட்சிசுந் தரமதன் புகலென அடியவர்க்குத்
தமையனுர்மேலரு ளைசலக் கவிசொலுந் தமிழ் படிப்பார்
நேயமா ரின்புறு மிட்டசித் திகளெலா நேர்வரன்றே.

பதிக முற்றுப்பெற்றது.

சிவமயம்.

## காப்பு.

சுந்தரஞ்சேர் தென்களந்தைச் சோதிமய மாய்நிறைந்த
கொந்தளக பாரமுலைக் கோமதிமேற்-சந்ததமும்
ஆசிரியப் பாவியம்ப வானைமுகன் பொற்பாதம்
நேசமுட னேபோற்று வாம்.

களக்காடுபத்தை
மகா-m-m-ஸ்ரீ பழனியப்பக்கவிராயரவர்களாலியற்றிய

## சிறப்புப்பாயிரம்.

பாமாலைக் கசிந்தொழுகு மருமானைப் பயின்றிடுங்கோ மதிமா துக்கு, பூமாலை பதுவணுகி லிருள்வலிகண் டலருவென புகழ்ந்து தங்க, தாமாலை யணிகிறிமே லவடுவாகு மெனநினைந்தே தமிழாற்சந்தப், பாமாலை யணிந்திடுமீ ஞட்சிநா கேந்திர வள்ளற்பண்புலானே.

திருக்களந்தைநகர்

# கோமதியம்மன்

## ஆசிரியவிருத்தம்.

கார்மேவு குழலழகு நற் பொட்டிட்ட நெற்றியுங்கமலவதனத்தி னழகும், காவியை நிகர்த்தவிழி யுங்கருணை யகலாத கனிமதுர வாயி னழகும், ஏர்மேவு குழையினழ குந்தரள மூக்குத்தி யிணையுமணி மூரலழகும், இலகுநவ ரத்னமணி வடமொளிரு கண்டத்தி லிறைவன்னி தாலி யழகும், வார்மேவு கும்பத் தனத்தினழ குந்தரும மருவுசெங் கையினழகும், மாமகளு நாமகளு மனுதினம் பரவுமிரு வனசமலரடியி னழகுஞ், சீர்மேவு புவிமீதி லடியனிரு கண்குளிர தெரிசிப்ப தெந்த நாளோ, திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (1)

அன்னைதன் னுதரத்தி லீரைந்து மாதமா யடங்கிக் கிடந்துழன்று, அவனியிற் பிறந்தபின் னறிவது மயங்கியே யாடித் திரிந்து நொந்து, பன்னிரு வயதளவுங் கல்வியை முயன்றபின் பதினாறு வயதானபின், பாவையரின்வசமு ண்டுபந்தத்திலிடியுண்டு பற்பல பவங்கள்செய்து, தன்னிகரி லையென்று வல்லாண்மைபேசியே தாயேயுன் பதமறந்த, தமியனேற் குனதுதிரு வருளளித் தாண்டருள் சாம்பவி சிவ சங்கரி, சின்னந்கடாரிதம் பட்டமத் தளமுரசு தின மொலிக் குங்களந்தை, திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (2)

நற்றமிழ் வல்லதிருச் சம்பந்த ருக்குனது ஞானப்பா லுதவ விலையோ, நன்றுவ லன்றிரு வெண்கடா பசிதீர நல்லமு தளிக்க விலையோ, பெற்றவட் காகவே பிராணேச ரிடஞ்சொலிப் பெருங்கட லழைக்க விலையோ, பிரமனைப் படைக்கவு முகுந்தனைக் காக்கவும் பெருங்கருணை புரிய விலையோ, கற்றமா தவமுடைய வபிராம பட்டரின் கவி தனைக் கேட் டிரங்கிக் கலைமதியை யமாவாசை தன்னிலே யாவருங் காணவு மழைக்க விலையோ, சிற்றறி வுடைய வென் னெஞ்சகக் கல்லிழகத் திருவருள் செய்வ தரிதோ, திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதி யம்மை யே. (3)

சொன்னயத் தானுனது பாதார விந்தத் துதிக்கவறி யேனென் மனந், தூய்மையோ சற்றுமிலை நியமமோ செய் திடத் தாலமோ திடமில்லை யே, நன்னயம் தாகவே ஞான மோ கனவினும் நாடிடேன் பேரின்ப மோ, நாடவென்றாற் கள்ள மனதுவே றாகியே நலிபுதே பாவிநெஞ்சம், வன்னக் குயின்மொழி மாதங்கி திரிசூலி மகமாயி மந்தர ரூபி, மகி டனைச் செற்றமலை மங்கையே நங்கையே மதுசூத னன்றங் கையே, தென்னற்கு மகவான செல்வியே யென்னைத் திரு த்தியாட் கொண்டருளு வாய், திங்களணி சங்கரன் பங்கி லுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (4)

செந்தாம ரைக்கோவு நந்தகோ பாலனுஞ் செய்யமதி யும் பானுவுந், தேவர்கோ னும்மளைகைப் பதிவளர்குபேர னுந் தெய்வத் தமிழ்க் குரவனு, நந்தாத வொருகோட்டு ஐங்கரக் கடவுளு நலமிகு மறுமு கவனு, நங்கைரதி கேள்வனுஞ் சந்ததந் தொழுமுனது நளின பதந் தந்தருளு வாய், கொந்தார் மலர்ச்சோலை மீதிலனு தினமந்திக் குரு ளையை வயற்றிலேந்திச், குதிகொண்டு திரியவே கனியுதிர்ந் துடைபட்டுக் கொங்குமது மருகிலோடிச் சிந்துபோலரவிந்த வாவியிற் றதும்பிநன் செய்விளை களந்தை மேவுந், திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (5)

மாகாணி கலையிலே நத்தடையிலே திவ்யத் மதுரமென் கனிவாயி லே, வாளொத்த விழியிலே பாலொத்த மொழியிலே மட்டழுக பாரத்திலே, காதிலணி குழையிலே வளையிலே நுதலிலிடு கஸ்தூரித் திலக மதிலே, களபதன வெற்பிலே குழையநூ லிடையிலே கமலமதி வதனத்திலே, கோதிவிடு துடையிலே தொங்கலணி மார்பிலே தோகைமென் சாயல் தனிலே, துவளுமென் சிந்தையைத் துளையவிட் டனுதினஞ் சோர்வுறு தெனையாளுவாய், சீதளக் கங்கைமுடி திகழ்சதய வாகீசர் செல்வமே தென் களந்தை, திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (6)

அன்பர்போ லக்கமணி பூண்டுதிரு வெண்ணீற்றை யங்கநிறை யப்பூசியே, யாகம் புராணகலை யெல்லா மறிந்த தா யாணவம் பலபேசியே, துன்பே புரிந்துலக வாழ்வதனை நம்பியே சூதுகொலை பொய்பேசியே, தொல்லைவல வினையினு லல்லற் படுமெனது துன்பந் தவிர்த்தாளுவாய், என்புநெக் குருகத் தியானிக்கும் அடியவ ரிதயத் திருக்கும் வாழ்வே, இன்னமுது கற்கண்டு சீனிகனி பாகென வெங்குநிறை பெருவெள்ள மே, தென்னருக் கரசியாய் வந்தமா தவமே திகழ்தென் களந்தை வாழுந், திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (7)

சீர்பெற்ற தக்கன் தவத்தினல் மலர்மீது சிறுகுழவி யாயிருந்தாய், திண்ணவெற் பரையனுள மகிழவே ஓடையிற் செல்வமக ளாகி யுற்றாய், பேர்பெற்ற மலையத்து வச்சுதவு வேள்வியிற் பெண்மக வாகி வந்தாய், பெருமைபெறு வலையரச னருள்பெற புன்னையின் பெருநிளலில் வீற்றிருந்தாய், நீர்பெற்ற வேணியின் மெய்யினிற் பாதியாய் நீங்கா திருந்து வாழ்ந்தாய், நின்னருட் பிரபல மின்னபடி யென்றுநா னினைந்துரைத் திடமுடியுமோ, தேருற்ற வாளிபோற் சுளலுமென் சிந்தையைத் தியக்கறுத் தருள் புரிகு வாய், திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (8)

ஐயோ வெனைப்போலு மறிவிலாப் பேதையிவ் வகிலத்தி லெங்கு முளதோ, அகிலாண்ட மெல்லாம் படைத்தவுன் றிருவடிக் கன்புடன் பூசை புரியேன் மெய்யான வடியரைக்கண்டிடே னெதிர்கொண்டு மெய்சிலிர்த் திருகை கூப்பேன், மேதினியிற் பொருள்தேடி யுண்பதல் லாமலே மெய்த்தவ மியற்றி யறியேன், கைதவஞ் செய்தலல் லாதுனது மகிமையைக் காதினிற் கேட்டு மறியேன், கடையனேன் மேற்கருணை செய்துபர கதியடையக் கமலபத முடிசூடுவாய், செய்யினில் வெண்பணில மீன்றமணி யாற்குவளை திகழ்ந்து விரி தென்க ளந்தை, திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (9)

மண்பட்ட கலமென வருந்துமிடி யாலுடல் மனதுடைந் தறிவு குன்றி, மாபாத கஞ்செய்பு மடையரை யடுத்துமா மதுரமிகு கவிபாடியே, புண்பட்ட ஒருசாணின் கும்பியை நிரப்பியவன் பொய்மைவழி மீதுநாளும், போந்துநல் லடியரையிகழ்ந்தவிப் பாதகன் பொறைதவ மியற்றி நல்ல, பண்பட்ட திவ்யமது திகழுமணிநின்பாத பங்கயப் பாபாடியே, பண்புபேரானந்த மாகிநித மழியாத பரமவீடடைவ தென்றோ, திண்பட்ட சிலையரச நற்றவத் தெய்வமெனுஞ் செல்வமே தென்க ளந்தை, திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதியம்மை யே. (10)

எல்லாம் படைத்தநல் லருளிலல்லலற ஏழை நான் வந்திருக்கில், எண்டிசை யோர்களுனைக் கண்டபடி வைவ ரோ இமையவனடாதென்ப ரோ, பொல்லாத மாபாவி சித்திர மொழியுமோ பொன்னடியி லிடமில்லையோ, பூத கண மேசுமோ வேதம்வசை பேசுமோ பூமணங் குறைந்து விடுமோ, நல்லா ரிணக்கமில் லாதவனிவனென்று நல்லடி யர் நகைசெய்வ ரோ, நல்வினை தீவினை யெதிர்த்துவாய் பேசுமோ நாயினேற் குண்மை யுரையாய், செல்லார் மலர்ச் சோலை கிள்ளைமறை பயில்திகழ் தென்களந்தா புரிவளர், திங்களணி சங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோ மதி யம்மை யே. (11)

கோமதிஅம்மாள் ஆசிரியவிருத்தம்.

முற்றிற்று.



